POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. 9 - TN - MS C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# சட்டமன்றமா? நீதிமன்றமா?

Regd. No. TN-MS (C) 244 Phone 42021 6 பக்கம் விலை 50 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 19-7-1985 வெள்ளி வெளியீடு 20-7-1985 சனி [இதழ் 267

## யாருக்கு அதிக அதிகாரம்? சட்டசபையில் சூடான விவாதம்

சென்னை, ஜூலை 19- உயர் அதிகாரம் படைத்தது சட்டமன்றமா? அல்லது நீதிமன்றமா? என்பது பற்றி தமிழக சட்டமன்றத்தில் இன்று சூடான விவாதம் நடந்தது.

சட்டப்பேரவையை அவமதித்த குற்றத்துக்காக 2 வார தண்டனை பெற்ற பால்ராஜ் பிரச்சினை உயர் நீதிமன்றத் தீர்ப்பின் எதிரொலியாக இன்று சட்டப்பேரவையில் மீண்டும் வந்தது.

இப்பிரச்சினையை காங்கிரஸ் உறுப்பினர் சித்தன் ஒழுங்குப் பிரச்சனை மூலம் எழுப்பினார்.

அப்போது அவர் கூறியதாவது:

இந்த அவைதான் சுப்ரீம், சபாநாயகர் அளிக்கும் தீர்ப்பில் யாரும் தலையிட முடியாது. இந்த மன்றத்தால் தண்டனை பெற்ற பால்ராஜ் உயர்நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்திருக்கிறார்.

அந்த வழக்கு தீர்ப்பு அளிக்கப்பட்டது. அதில் ஒரு கருத்து முன்னாள் ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் சொன்னதாக சொல்லப்பட்டிருக்கிறது. அது பத்திரிகைகளிலும் வந்துள்ளது.

சட்டசபை உறுப்பினர்களைப்பற்றி இப்படிப்பட்ட கருத்துக்களை கூறுவது சரியா! அதுபோல் நாம் நீதிபதிகளைப்பற்றி பேசலாமா?

இவ்வாறு சித்தன் கேட்டார்.

### நாவலர் பதில்

டாக்டர் நாவலர் இதற்குப் பதிலளித்துக் கூறியதாவது:

நீதிமன்றம் செல்ல உரிமையிருக்கிறது. அதை ஏற்பதோ மறுப்பதோ நீதிபதியின் முடிவாகும்.

ஆனால், நீதிபதி ஒரு கருத்தை சொல்லியிருக்கிறார். சட்டப் பேரவை உறுப்பினர்களின் பொது இலக்கணம் பற்றி சொல்லப்பட்டுள்ளது.

நாமும் நீதிபதிகளைப் பற்றி இலக்கணம் சொல்லலாம். நீதிபதிகள் தராசு போல் இருக்க வேண்டும் என்று பொதுவான இலக்கணம் சொல்லலாம்.

உயர்நீதிமன்றம் இவ் வழக்கை தள்ளுபடி செய்திருக்கிறது.

அவர்கள் சொன்னது போல நாமும் பொதுவான கருத்துக்களை சொல்லலாம்

சித்தன்! பொதுவான இலக்கணத்தை சொல்லும் போது உள்நோக்கம் கற்பிக்கும் வகையில் உள்ளது.

குப்புசாமி (கழகம்) இந்த நேரத்தில் நான் ஒரு கருத்தை கூற விரும்புகிறேன் டாக்டர் ராதாகிருஷ்ணன் கூறியதாக அறிவுரை வழங்கியுள்ளனர். சட்டமன்ற உறுப்பினர்கள் எப்படி நடக்க வேண்டும் என்றெல்லாம் கூறியிருக்கிறார்கள்.

### தவறான கருத்து உருவாகும்

இதைப்படிக்கும்போது பொதுமக்களிடம் சட்டமன்ற உறுப்பினர்களைப் பற்றி தவறான கருத்து உருவாகக் கூடும்.

நீதிபதிகளைப் பற்றி முதல்வர் புரட்சித் தலைவர் ஒரு கருத்தை சொன்னார். சமுதாய நலன் கருதி நாம் சட்டங்களை இயற்றும் போது நீதிமன்றங்கள் முன்னறிவிப்புத் தாராமலேயே தடை விதித்து வருகின்றன என்று முதல்வர் கூறினார்.

இதற்காக உயர்நீதிமன்றத்தில் கண்டனம் தெரிவிக்கப்பட்டு வழக்கு இருக்கிறது அது இன்னும் தள்ளுபடியாகவில்லை.

சபாநாயகர்: இது துரதிர்ஷ்டவசமானது இவ்வாறு நீதிபதிகள் சொல்லியிருக்கக்கூடாது முன்னாள் ஜனாதிபதி கூறியதாக சில கருத்துக்களை கூறியிருக்கிறார்கள்.

அமெரிக்க ஜனாதிபதி ரூஸ்வெல்ட் சில கருத்துகளை கூறியிருக்கிறார். நீதிமன்றங்கள் சட்டசபை மீது ஆதிக்கம் செலுத்த முயலக்கூடாது என்று கூறியிருக்கிறார்.

நீதிமன்றங்கள் மீது மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கை குறையக்கூடாது. இவ்வழக்கைப் பொறுத்தவரை இதை நீதிமன்றம் ஆரம்பகட்டத்திலேயே தள்ளியிருக்கவேண்டும். ஆனால் ஏற்கப்பட்டு தீர்ப்பு கூறப்பட்டிருக்கிறது.

அதுபோல் நாம் ஏதும் செய்யவில்லை.

முதல்வர் மீது இருக்கும் வழக்கு பற்றிகூட குறிப்பிட்டார்கள்.

1971ல் ஒரு பத்திரிகை ஆசிரியர் நீதிமன்றத்தை அவமதித்த குற்றத்துக்காக நீதிமன்றத்துக்கு வரவழைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டார். 7 நீதிபதிகள் விசாரித்தனர்.

வழக்கின் விவரங்கள்சில வைக்கப்பட்டுள்ளது அந்த அளவுக்கு நீதிமன்றத்தின் கண்ணியத்தைப் பாதுகாக்கிறார்கள் இப்பிரச்சினையில் இந்த அளவு போயிருக்க வேண்டியதில்லை. இது துரதிர்ஷ்டவசமானது. இத்துடன் இதை விட்டுவிடுவோம்.

இவ்வாறு சபாநாயகர் பி. எச். பாண்டியன் கூறினார்.

## லைசென்ஸ் பெறாத வீடியோ கடைக்காரருக்கு 3 மாதம் ஜெயில்

சென்னை, ஜூலை 19- வீடியோ லைசென்ஸ் பெறாத கடை உரிமையாளருக்கு ஆயிரம் ரூபாய் அபராதம் அல்லது 3 மாதம் ஜெயில் தண்டனையோ அல்லது இந்த இரண்டும் சேர்ந்தோ வழங்கப்படுமென போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் கூறினார்.

நிருபர்களிடம் பேசுகையில் இதை தெரிவித்த கமிஷனர், ஆபாச சுவரொட்டி ஒட்டுபவர் மற்றும் அச்சிட்டவர் மீதும் வழக்குத் தொடரப்படுமென்றும் கூறினார்.

## போலி பாஸ் போர்ட்: மூவர் கைது

சென்னை, ஜூலை 19 போலிபாஸ் போர்ட்டுகளைத் தயாரித்து வடக்கு கடற்கரை சாலையிலுள்ள ஒருவங்கியில் 20 ஆயிரம் ரூபாய்வரை மோசடி செய்ததாக அகமது, ராஜசேகரன் பாலசந்திரன் ஆகியோர் இன்று கைதுசெய்யப்பட்டனர்.

இது தொடர்பாக மேலும் மூவரை போலீசார் தேடி வருகிறார்கள்.

## சட்டசபை ஒத்தி வைப்பு

சென்னை, ஜூலை 19— தமிழக சட்டமன்றம் இன்று தேதி குறிப்பிடப்படாமல் ஒத்திவைக்கப்பட்டது. மின்சார வாரிய நிதி நிலை அறிக்கை முடிந்த பிறகு உறுப்பினர்கள் எழுப்பி இந்த 39 கவன ஈர்ப்புத் தீர்மானங்களுக்கு பல்வேறு அமைச்சர்கள் அறிக்கைகளை அளித்தனர்.

25-2-85 முதல் 8வது சட்ட மன்ற கூட்டத் தொடர் 59 நாட்கள் நடைபெற்றது. மாலையில் 4 நாட்கள் நடைபெற்றது.

அவை நடந்த நேரம் 284 மணி 54 நிமிடம்.

இந்தத்தொடரில் அதிகமான கேள்விகளை கேட்டவர் சைதை துரைசாமி. இவர் 144 கேள்வி கேட்டார். அடுத்து தாமரைக்கனி. இவர் 142 கேள்வி கேட்டார்.

சட்டசபையை பார்வையிட 52,500 பேர் வந்திருந்தனர்.

இத்தகவல்களை சபாநாயகர் பி.எச்.பாண்டியன் வெளியிட்டு அனைவருக்கும் நன்றி கூறினார்.

சட்ட மேலவைக் கூட்டத் தொடரும் காலவரம்பின்றி ஒத்திவைக்கப்பட்டது.

## நகராட்சி வருவாய் பெற முட்டுக்கட்டை!

சென்னை, ஜூலை 19- சட்டமன்றத்தில் கழக உறுப்பினர் குத்தாலம் பாப்பா சுப்பிரமணியன் கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் ப. உ. ச. கூறியதாவது—

திருவாரூர் நகராட்சிக்கு சொந்தமான வாரச்சந்தை ஏலம் விடுவது தொடர்பாக வழக்கு உயர்நீதிமன்றத்தில் இருப்பதால் பல ஆண்டுகளாக ஏலம் விடப்படவில்லை.

வழக்குவிசாரணையைத் துரிதப்படுத்த மனு தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

நகராட்சி நிர்வாகங்கள் ஏலம் விடுவது, டெண்டர் விடுவது ஆகியவற்றை நீதிமன்றத்திற்குச் சென்று தடை வாங்கி வருகிறார்கள்.

மதுரை மாநகராட்சிக்கு சொந்தமான ஒரு கடையை ஏலம் விடுவதற்கும் டெண்டரும் கோரப்பட்டது. ஆனால் இதில் ஏதாவது ஒன்றைத்தான் செய்ய வேண்டுமென்று நீதி மன்றத்தில் ஸ்டே வாங்கி விட்டார்கள்.

ஏலம் விடுவதற்கு முன் வந்த போது ஏலம் விடக்கூடாது என்று ஸ்டே வாங்கினார்கள்.

மாநகராட்சியே வாடகை வசூலிக்க முயன்றால் அதற்கு ஸ்டே வாங்கி விட்டார்கள் இதுபோன்று பல நகராட்சிகளில் வருமானம் வருவதற்கு வழியில்லாமல் நிற்கிறது.

இவ்வாறு அமைச்சர் ப.உ.ச. கூறினார்.

## ரூபாய் 1 கோடி சங்குகள் தேக்கம்

சென்னை, ஜூலை. 19- சட்டமன்றத்தில் கழக உறுப்பினர் சைதை துரைசாமி கேள்விக்கு பதில் அளிக்கையில் அமைச்சர் கோவேந்தன் கூறியதாவது:—

தமிழகத்தில் ஒருகோடி ரூபாய்க்கு மேல் மதிப்புள்ள சங்குகள் விற்பனை செய்யப்படாமல் தேங்கியிருக்கின்றன.

மேற்கு வங்க கைத்திறன் தொழில் வளர்ச்சிக் கழகம் சங்குகளை வாங்கும் விகிதத்தில் கருத்து வேறுபாடு ஏற்பட்டதால் கடந்த ஆண்டு சங்குகள் விற்பனை செய்யப்படவில்லை.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

## 'திடீர்' மாப்பிள்ளை தாலி கட்டிய திருமணம்

மங்களூர், ஜூலை 19 தாலிகட்டும் நேரத்தில் மாப்பிள்ளை திடீர் என்று ஓடிவிட்டார். இதனால் திருமணத்துக்கு வந்த வேறு ஒருவர் மணமகன் ஆனார்.

இந்த ருசிகரச் சம்பவம் பற்றிய விவரம் வருமாறு:-

மங்களூரைச் சேர்ந்தவர் கங்காதரன். இவரது மகள் ராஜீவி.

ராஜீவிக்கும் புத்திலியை சேர்ந்த ஈஸ்வரனுக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டு இருந்தது. திருமண நாளும் வந்தது.

மணமேடையில் மணப்பெண்ணை அலங்கரித்து உட்கார வைத்திருந்தனர். மணமகனுக்காக அனைவரும் காத்திருந்தனர். ஆனால் மணமகன் வரவில்லை. நீண்ட நேரம் ஆகியும் மணமகன் வராததால் பெண் வீட்டார் கவலையடைந்தனர். செய்வதறியாது திகைத்தனர்.

அப்போது அங்கு திடீர் என்று வந்த ஒரு சப் இன்ஸ்பெக்டர் மணமகன் ஏன் வரவில்லை என்று விளக்கினார்.

மணமகன் ஈஸ்வரனுக்கு ஏற்கனவே திருமணமாகியுள்ளது. அவருக்கு மனைவியும் 2 குழந்தைகளும் உள்ளனர். முதல் மனைவி போலீசில் புகார் கொடுத்துள்ளார்.

இதைப் புரிந்து கொண்ட ஈஸ்வரன் திருமணத்துக்குச் சென்றால் போலீசார் கைது செய்து விடுவார்கள் என்று பயந்து வராமலேயே ஓடிவிட்டார். என்று போலீஸ் அதிகாரி தெரிவித்தார்.

பின்னர் திருமணத்துக்கு வந்த தாரனாத் என்பவரை மணமகனாக சப் இன்ஸ்பெக்டரே தேர்ந்தெடுத்தார்.



சட்டப்பேரவை மேலவை உறுப்பினர்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் விருந்தளித்தார். அப்போது மாண்டலின் இசைநிகழ்ச்சி நடத்திய மாஸ்டர் யு. சீனிவாசுக்கு நடராஜர் சிலையை முதல்வர் புரட்சித் தலைவர் பரிசளித்தார்.

## முதல்வர் கோரிக்கையை ஏற்று தமிழக ரயில்பாதை திட்டங்களுக்கு அதிகநிதி

புதுடெல்லி, ஜூலை 19- தமிழகமுதல்வர் புரட்சித் தலைவர் அவர்களின் வேண்டுகோளை ஏற்று, கரூர்-திண்டுக்கல்-தூத்துக்குடி அகலரெயில்பாதைத் திட்டத்திற்கு மைய அரசு அதிக நிதி ஒதுக்கியிருக்கிறது.

கரூர்-திண்டுக்கல்- தூத்துக்குடி அகல ரெயில் பாதைத் திட்டத்தை துரிதமாக முடிக்க வேண்டும் என்று புரட்சித் தலைவர் கேட்டுக்கொண்டார்.

கரூர் திண்டுக்கல் தூத்துக்குடி அகல ரெயில் பாதைத் திட்டத்திற்கும் சென்னை நகர துரித ரெயில் திட்டத்திற்கும், ஆண்டு தோறும் ஏகாம்பரநாதர் கோவிலில் பிரசாதம் கொடுப்பதுபோன்று மிகக் குறைந்த அளவே நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டு வந்தது.

### பன்சிலாலிடம் வலியுறுத்தல்

இதனை புரட்சித்தலைவர் மைய அரசின்கவனத்திற்கு கொண்டு வந்தார். இந்தத் திட்டங்களுக்கு பெயர் அளவுக்கு நிதி ஒதுக்கீடு செய்தால் எப்போது நிறைவேறும் என்ற கேள்வியையும் எழுப்பி இருந்தார்.

அதிக நிதி ஒதுக்க வேண்டிய அவசியத்தை சென்னைக்கு வந்த மத்திய ரெயில்வே அமைச்சர் பன்சிலாலிடமும் வலியுறுத்தினார்;

மைய அரசு புரட்சித் தலைவர் அவர்களின் கோரிக்கையை ஏற்றுக் கொண்டு இருக்கிறது

### திட்டம் முடிவடைந்தது

கரூர் - திண்டுக்கல் தூத்துக்குடி அகல ரெயில் பாதைத் திட்டத்திற்கு தற்போது அதிகமாக ஒரு கோடியே முப்பது லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறது. ஆரம்பத்தில் இந்தத் திட்டத்திற்கு 3 கோடி ரூபாய்தான் ஒதுக்கியிருந்தது.

கரூர்— திண்டுக்கல் தூத்துக்குடி அகலரெயில் பாதைத் திட்டத்தின் ஒரு பகுதியாக மணியாச்சியிலிருந்து தூத்துக்குடிக்கு முன்னதாக உள்ள மீளவிட்டான் ரெயில் நிலையம்வரை அகல ரெயில் பாதை அமைக்கும் திட்டம் முடிவடைந்து விட்டது.

## 'நான் இறந்துபோனதாக வதந்திபரப்புகிறார்களே' அதிபர் ரீகன் வேதனை

வாஷிங்டன், ஜூலை. 19— நான் இறந்து விட்டதாக வதந்தி கிளப்புகிறார்கள் என்று அமெரிக்க ஜனாதிபதி ரீகன் துணை ஜனாதிபதி புஷ்ஷிடம் வேதனையுடன் குறிப்பிட்டார்.

அதிபர் ரீகன் உடல்நலம் அறுவை மருத்துவத்துக்குப்பின் தொடர்ந்து குணமாகி வருகிறது டாக்டர்கள் அவருக்கு திரவ நிலை உணவளிக்கத் தொடங்கியிருக்கிறார்.

சிறு குடலும், பெருங்குடலும் சேரும் இடத்தில் இருந்த ஒரு புற்றை நீக்குவதற்கு ஜூலை 13-ந் தேதி நடந்த அறுவை மருத்துவத்துக்குப் பின் முதன்முதலாக ஜூலை 17-ம் தேதிதான் இரவில் இடைவிழிக்காமல் நன்கு உறங்கினார் அதிபர் ரீகன்.

துணை அதிபர் புஷ், ஸ்பீக்ஸ் மற்றும் அதிபர் மாளிகை அலுவலகத் தலைமை அதிகாரி டொனல்டு ரீகன் முதலிய முக்கிய அதிகாரிகளோடு அதிபர் ரீகன் 45 நிமிட நேரம்பேசிக்கொண்டிருந்தார். அதிபர் ரீகன்தான் இருக்கும் அறைக்கு பக்கத்து அறையில் மைக் ராண் புஷ் வந்ததை அறிந்தது படுக்கையை விட்டு எழுந்து வந்தார் என்று ஸ்பீக்ஸ் தெரிவிக்கிறார்.

அதிபர் இவ்வாறு வந்த தைப்பார்த்த புஷ் வியப்போடு, 'நான் உங்களை பார்க்க வந்தேன் உங்களால் என்னைப் பார்க்கவருவது என்றால் நான் இறந்து பட்டதாகச் சிங்கப்பூர் அங்காடியில் செய்தி பரவியது குறிப்பிட்டு ரீகன்யார் பணம் பண்ண இந்த வழியைப் பின்பற்றியிருக்க வேண்டும்.' என்று துணை அதிபர் கூறினார்.



## கைத்தறிக்கு 60 நாட்கள் தள்ளுபடி தர டெல்லிக்கு புரட்சித்தலைவர் கடிதம்

சென்னை, ஜூலை 19 கைத்தறி துணிகளுக்கு 20 சதவிகித தள்ளுபடியை 60 நாட்கள் என்று இருந்ததை 30 நாட்களாக மத்திய அரசு மாற்றியுள்ளது. இதை மீண்டும் 60 நாட்களாக மாற்ற வேண்டும் என்று மத்திய அரசுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் கடிதம் எழுதியுள்ளார்.

இத்தகவலை அமைச்சர் வி.வி. சாமிநாதன் இன்று சட்டப்பேரவையில் தெரிவித்தார்.

கைத்தறித்துணி தேக்கம் குறித்து கழக உறுப்பினர் தங்கராஜ் ஒருகவன ஈர்ப்புத் தீர்மானம் கொண்டு வந்தார்.

இதற்கு அமைச்சர் சாமிநாதன் பதிலளிக்கையில் கூறியதாவது:—

அளவுக்கு அதிகமான கைத்தறித்துணி தேக்கத்தைக் குறைக்கும் பொருட்டு மத்திய அரசு 1983—84 முதல் ஆண்டுக்கு 60 நாட்களுக்கு தள்ளுபடி என்று அறிவித்தது. அதன்படி 83-84, 84-85 ஆண்டுகளில் 60 நாட்கள் தள்ளுபடி தரப்பட்டது.

### தள்ளுபடி அதிகரிக்க...

பண்டிகை காலங்கள் மற்றும் பெரியோர்கள் பிறந்தநாளை ஒட்டி பரவலாக அளிக்கப்பட்டது.

துணித்தேக்கத்தைக் குறைக்க இது உதவிகரமாக இருந்தது. ஆனால் 85-86-க்கு 30 நாட்கள் மற்றும் தேசிய கைத்தறி கண்காட்சிகளில் பங்கேற்கும் சங்கங்களுக்கு கண்காட்சி காலத்தில் 20 சதவிகிதம் தள்ளுபடி அளிக்கலாம் என்று மத்திய அரசு அறிவித்துள்ளது.

இதனால் ஆண்டுக்கு 30 நாட்களுக்கு மேல் தள்ளுபடி தரமுடியாத நெருக்கடி உருவாகி உள்ளது. எனவே முன்பிருந்தது போலவே 60 நாட்களுக்குக் குறையாமல் தள்ளுபடி காலத்தை நீட்டித்துதர வேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் மூலம் மத்திய அரசுக்கு கடிதம் எழுதப்பட்டுள்ளது.

அப்படி 60 நாட்கள் ஆக்கினால் பேரறிஞர் அண்ணா, தந்தை பெரியார் பிறந்த நாட்களையொட்டி 7 நாட்களும், தீபாவளியையொட்டி 19 நாட்களும், கிறிஸ்துமஸ் ஒட்டி 7 நாட்களும் பொங்கலை ஒட்டி 7 நாட்களும், ஆக 40 நாட்களுக்கு இனி தள்ளுபடி தரமுடியும்.

தள்ளுபடி தருவதால் தான் 20 சதவிகிதம் முதல் 93 சதவிகிதம் வரை கைத்தறி துணிகள் கடந்த 2 ஆண்டில் விற்பனையாகியிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் வி. வி. சாமிநாதன் கூறினார்.





**முத்தமிழ்**

இயல், இசை, நாடகம் மக்களுக்கு அறிவுவளர, அகமகிழ்வு பிறக்க, நன்னெறி காட்டப் பயன்பட வேண்டும்.

—பேரறிஞர் அண்ணா

**ஒழுக்கம்**

ஒழுக்கம் என்ற வார்த்தை பாமர மக்களை ஏமாற்றி மற்றவர்கள் வாழப் பயன்படுத்தும் சூழ்ச்சி ஆயுதமாகி விடக்கூடாது.

— தந்தைபெரியார்

# திமுக.தலைவர் அவிழ்த்து விடும்புளுகுமூட்டைகள்: ஆர். எம். வீ. தாக்கு

தஞ்சாவூர், ஜூலை 19— புரட்சித் தலைவருக்கு எதிராக தி. மு. க. தலைவர் அவிழ்த்துவிடும் புளுகு மூட்டைகள் பொய்யாய் பழங்கதையாய் போய் கொண்டிருக்கின்றன என்று அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

தஞ்சையில் நடந்த கழக அரசின் சாதனை விளக்கக் கூட்டத்தில் பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறு கூறினார்.

(அவருடைய பேச்சின் முதற்பகுதிகள் கடந்த இரண்டு நாட்களாக அண்ணாவில் வெளிவந்திருப்பது வாசகர்கள் அறிந்ததே)

இறுதி உரையில் ஆர். எம். வீ. பேசுகையில் குறிப்பிட்டதாவது:-

புரட்சித்தலைவரின் புகழை மறைப்பதற்காக கருணாநிதி புளுகு மூட்டையை அவிழ்த்து விடுகிறார். கருணாநிதி இன்றைக்கு ஒரு புதிய போர் முறையைக் கையாள்கிறார். புரட்சித்தலைவரை எதிர்த்து தோல்வி கண்டு விட்டார். களத்தில் வெற்றி பெற முடியவில்லை. புறமுதுகிட்டு ஓடி விட்டார்.

அதனால் தான் புதிய தோர் போர்க்களத்தை தேர்ந்தெடுத்திருக்கிறார். கூட்டுறவுகடனைதிருப்பிச் செலுத்தாமல் செய்துவிட்டால் ரிசர்வ் வங்கிக்கு திருப்பி செலுத்த வேண்டிய பணத்தைசெலுத்த முடியாது. ரிசர்வ் வங்கி மீண்டும் கடன் கொடுக்காது. ரிசர்வ்வங்கி கடன் கொடுக்காவிட்டால் மீண்டும் விவசாயிகளுக்கு தமிழக அரசால் கடன் கொடுக்கமுடியாது. கடன்கொடுக்காவிட்டால் விவசாயிகள் கோபமடைவார்கள். இந்த நிலையை பயன்படுத்தி அரசை கவிழ்த்துவிட்லாம் என்று கருணாநிதி எண்ணுகிறார்.

### குருடன் கணக்கு

கொக்குதலையில்வெண்ணெயை வைத்து கொக்கைப் பிடிக்கலாம் என்று குருடன் கணக்குப் போட்டதைப் போல கருணாநிதி இன்றைக்குகணக்குப் போட்டுக் கொண்டுஇருக்கிறார்.

புரட்சித் தலைவரை இவர் என்றைக்கும் வென்றதில்லை, இன்றைக்கும் வெல்லமுடியவில்லை; நாளைக்கும் வெல்ல முடியாது.

அவர் இன்றைக்கு கல்யாண மேடைகளை எல்லாம் அரசியல் மேடையாக மாற்றிக் கொண்டு இருக்கிறார், நாங்களெல்லாம் அரசு விழாக்களில் அரசியல் பேசுவதாக அவர் குற்றம் சாட்டினார். அரசு விழாக்களில் எதிர்க்கட்சிகளின் குற்றச்சாட்டுகளுக்கு பதிலளிக்காமல் இறந்தவர்கள் வீட்டிலா பதிலளிக்க முடியும்?

### ரகசிய கும்பாபிஷேகம்

அவர் இப்போது ஒரு ஆராய்ச்சியில் இறங்கி உள்ளார். அவர்ஒருகாலத்தில் கையில் எடுத்து முனை மழுங்கிய அந்த ஆயுதத்தை மீண்டும் கையில் ஏந்தியிருக்கிறார்.

புரட்சித்தலைவர்தமிழர் இல்லை என்று சொல்லிப் பார்த்தார். அப்போது மக்கள் கேட்டார்கள். புரட்சித் தலைவரையே தமிழர் இல்லை என்று சொன்னால் கருணாநிதி அவர்களே உங்களையே நாங்கள் சந்தேகப்பட வேண்டியிருக்கும் என்று நாட்டு மக்கள் சொன்னார்கள். "புரட்சித் தலைவர் தமிழ் தலைவர்களையும் மதிக்கவில்லையாம், தமிழக கடவுள்களையும் மதிக்கவில்லையாம்" கருணாநிதி இப்போது பேசுகிறார். தமிழக கடவுள்கள் மீது கலைஞர் கருணாநிதிக்கு எவ்வளவு அக்கறை வந்திருக்கிறது,

இவர் ஆட்சிசெய்தகாலத்தில் கடவுள்கள் மீது எவ்வளவு அக்கறை காட்டினார்? எத்தனை கோயில்களுக்கு திருப்பணி செய்தார்? கும்பாபிஷேகம் நடத்தினார்? நமக்குத் தெரியாதா?

அவர் பிறந்தஊரிலே ரகசியமாக ஒரே ஒரு கோயிலுக்கு மட்டும் கும்பாபிஷேகம் நடத்தினார். யாருக்கும் தெரியாமல் பூஜைகளெல்லாம் நடத்தினார். தாலியறுத்த விதவை யாருக்கும் தெரியாமல் வாழ நினைப்பதைப் போல ரகசியம் நடத்தினார்.

தமிழகத்து தலைவர்களை புரட்சித் தலைவர் மதிக்கவில்லை என்று கருணாநிதி சொல்கிறார்.

தமிழகத்தலைவர்களை மதிக்கத்தெரியாதபுரட்சித் தலைவர் ஆட்சிகாலத்தில் தான் தந்தை பெரியாருக்கு நூற்றாண்டு விழா நடந்தது. ஒவ்வொரு மாவட்டத்தின் தலை நகரிலும் தந்தை பெரியார் நினைவுத் தூண்கள் அமைக்கப்பட்டன.

பேரறிஞர் அண்ணா பெயராலே மாவட்டம். பேரறிஞர் அண்ணாவுக்கு ஆண்டுதோறும் விழா.

### திரு.வி.க. விருது

பாவேந்தர் பெயராலே பரிசு- திரு. வி. க. பெயராலே விருது.

மகாகவி பாரதிக்கு — வ.வே.சு. ஐயருக்கு நூற்றாண்டு விழா — தமிழ்ச் சான்றோர்களுக்கெல்லாம் விழா — புரட்சித் தலைவர் ஆட்சிக் காலத்திலேதானே நடக்கின்றது.

கருணாநிதி ஆட்சியில் இருந்தபோது அவருக்கு அண்ணாவின் நினைவு வந்ததா? தந்தை பெரியாரின் நினைவு வந்ததா? கேட்டால் அண்ணாவுக்கு ஊரெல்லாம் சிலை வைத்தேனே என்பார்.

ஏன் வைத்தார்? சென்னையில் தனக்கு சிலை வைத்துக் கொள்வதற்காகத்தான். முதல் அமைச்சர் மூகாம்பிகை கோயிலுக்கு போனது ஏன் என்று கேட்கிறார்.

இதைவிட விபரம்கெட்டதனம் வேறென்ன இருக்க முடியும்? தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த ஒருவர் பழனிக்குப் போனால் அது தவறா? தஞ்சை மாவட்டத்தில் சுவாமி மலை இருக்கும்போது பழனி மலைக்கு ஏன் போகிறாய் என்று கேட்கலாமா?

### பொருந்தா வாதம்

மாரியம்மன் கோயில் பக்கத்தில் இருக்கும் போது சமயபுரம் போகலாமா? என்று கேட்பவரைப் பற்றி நாம் என்ன நினைப்பது. நான் கேட்கிறேன், கண்ணுக்கு நோய் வந்தபோது கருணாநிதி அமெரிக்காவிற்கு போனதேன்?

தமிழ்நாட்டிலே டாக்டர்களே கிடையாதா? இங்கே கண்ணாடிகளை வழங்க ஒரு கண் மருத்துவரை தேடி பிடித்தீர்களே அவர் இங்கே தானே இருந்தார்? பின்னர் ஏன் அமெரிக்காவிற்குப் போனீர்கள்?

எனவே கருணாநிதி வைக்கின்ற வாதம் பொருத்தமற்ற வாதமாகும் பொருளற்ற வாதமாகும்;

### வெல்லும் சக்தி இல்லை

கருணாநிதி என்ன சொன்னாலும் எதைப் பேசினாலும் நாட்டு மக்கள் நம்ப தயாராக இல்லை.

இன்றைக்குஎட்டாண்டு கால சாதனையை விளக்கிக் கொண்டு இருக்கிறோம். எட்டாண்டுகள் அல்ல, எண்பது ஆண்டுகள் ஆனாலும் இந்த நாட்டில் புரட்சித் தலைவரின் சாதனைதான் விஞ்சி நிற்கும். அதனை வெல்லுவதற்கு எந்த கொம்பனும் இங்கே வர முடியாது. புரட்சித் தலைவரின் ஆற்றல் அத்தனையும் லட்சோபலட்சம் தொண்டர்களின் ஆற்றலை- உழைப்பை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

தொண்டர்கள் என்ற அடித்தளத்தின் மீதுதான் புரட்சித் தலைவர் என்கிற ஆலயம் எழும்பிநிற்கிறது. அந்த அஸ்திவாரத்தையும் எவரும் எதுவும் செய்ய முடியாது. இந்த ஆலயத்தையும் எவரும் வீழ்த்திவிட முடியாது.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ.பேசினார்.

# காமராஜர் மாவட்ட ஆட்சித்தலைவர் வேண்டுகோள்

சென்னை, ஜூலை 19- காமராஜர் மாவட்ட ஆட்சித்தலைவர் விஜயராகவன் ஸ்ரீவில்லிபுத்தூரில் உள்ள அருள் மிகு ஆண்டவர் திருக்கோயிலின் தேரை பார்வையிட்டார். எப்போதும் இல்லாதது போல் இந்த வருடம் 3 அல்லது 4 நாட்களுக்குள்தேரை நிலைக்கு கொண்டு வரவேண்டும் என்று பக்தர்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

# நல்லுசாமியிடம் கோரிக்கை மனுக்கள்: உடனடி பைசல்

திருச்சி, ஜூலை. 19 அமைச்சர் நல்லுசாமியிடம் 600 கோரிக்கை மனுக்கள் கொடுக்கப்பட்டன. அந்த மனுக்கள் மீது உடனடியாக முடிவு மேற்கொள்ளப்பட்டது.

அமைச்சர் ந. நல்லுசாமி திருச்சி மாநகராட்சி அலுவலகத்தில் பொது மக்களின் கோரிக்கைகளை கேட்டறிந்தார். காலை 11.00 மணி முதல் மாலை 2.00 மணி வரை மக்களின் கோரிக்கைகளைக்கேட்டு அவர்களின் குறைகளை தீர்க்க உடனடி நடவடிக்கை எடுத்தார்.

அப்போது மாவட்ட அளவிலான அரசு அதிகாரிகள் வந்திருந்தனர். சுமார் 600 க்கும் மேற்பட்ட கோரிக்கை மனுக்களை அமைச்சர்பெற்றுக் கொண்டார். அமைச்சரால் பெறப்பட்ட மனுக்களின் முக்கியமான கோரிக்கைகள் அடிப்படை வசதி சாலை வசதி வீட்டு மனைப்பட்டா, விளக்கு வசதி போன்றவையாகும் இவைகளை உடனடியாக செய்ய ஆணையிட்டார்.

மேலும் திருச்சியில் அமைச்சர் இல்லாத நாட்களில் பொது மக்களின் கோரிக்கை மனுக்களைப்பெற்று அவற்றின் மீது நடவடிக்கை எடுக்க ஒரு புதிய ஏற்பாட்டைச் செய்துள்ளார்.

### பொது பிரச்சினை

திருச்சி 2-வது தொகுதியில் பொதுப்பிரச்சினை சம்பந்தப்பட்ட கோரிக்கை மனுக்களை மக்கள் அரசு விடுமுறை நாட்களைத் தவிர மற்ற நாட்களில்மதியம் 2 மணி முதல் மாலை4 மணிவரை திருச்சி —தில்லைநகர் சாலையில் உள்ள அவரது இல்லத்தில் கொடுக்கலாம் அல்லது அங்குள்ள குறிப்பேட்டில் பதிவு செய்யலாம். மனுக்களைப்பெறுவதற்காக திருச்சியில்தனி அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார்.

# டி.வி.யில் திரையிடும் சினிமா தேர்வு செய்ய தனிபட்டோர் குழு

புதுடெல்லி, ஜூலை. 19—

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் காட்டப்படும் திரைப்படங்கள் மற்றும் சிறந்த நிகழ்ச்சிகளைத் தேர்வு செய்யும் தொலைக்காட்சிக் குழுவில் அரசு முறை சாரா பற்றவர்களை சேர்க்க அரசு முடிவு செய்துள்ளது.

இதுபோன்ற குழுக்கள் ஒன்று பம்பாயிலும் மற்றொன்று டெல்லியிலும் இருக்கும், இவர்கள் தொலைக்காட்சி மற்றும் சினிமாத் துறைகளில் சம்பந்தமில்லாதவர்களாகவும், அதே சமயம் தாங்கள் சார்ந்துள்ள துறையில் பிரபலமானவர்களாகவும் இருப்பார்கள். இதுபோன்ற குழுவில் வெளியார்தேர்வுசெய்யப்பட மாட்டார்கள். என ஒரு செய்தி ஏஜென்சி செய்தி வெளியிட்டிருந்தது. இது தவறான செய்தியாகும்.

# வாலிபரை துண்டு துண்டாக வெட்டி கொன்ற பயங்கரம்

சென்னை, ஜூலை 19— பழிக்குப் பழி வாங்குவதற்காக ஒருவரை துண்டு துண்டாக வெட்டிக் கொலை செய்தனர்.

எண்ணூர் ராதாகிருஷ்ணன் கொலை வழக்கில் புது திருப்பம் ஏற்பட்டுள்ளது.

கடந்த மாதம் எண்ணூரைச் சேர்ந்த 37 வயதான ராதாகிருஷ்ணன் கொலைசெய்யப்பட்டார் இது தொடர்பாக ஏழு பேர் கைது செய்யப்பட்டு விசாரணை நடைபெற்று வருகிறது.

இதற்கிடையில் அந்த ராதாகிருஷ்ணனை கொலை செய்தவர் அவரது கூட்டாளியான அரும்குறிச்சி என்பவர் தான் என்ற தகவல் தெரியவந்தது ஏற்கனவே கைதான 7 பேருக்கு ஜாமீன் கொடுத்து அவர்களுக்கு ஐயாயிரம் ரூபாய் பண உதவியும் இவர்தான் செய்தாராம்.

இதைத் தொடர்ந்து அரும்குறிச்சி இன்று எண்ணூரில் கொலை செய்யப்பட்டார்.

அவரது கை, கால்களை துண்டு துண்டாகவெட்டிக் கொலை செய்துள்ளனர்,

இந்தக்கொலைதொடர்பாக 10 பேர் மீது வழக்குத்தொடரப் பட்டுள்ளது

# சிறுதொழில் துவக்க கிண்டியில் நிலம் கொடுக்க அரசு முடிவு

சென்னை, ஜூலை, 19. சிறுதொழில் துவக்க கிண்டியில் பிளாட் விற்பது என்று அரசுமுடிவு செய்துள்ளது. இத் தகவலை அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் தெரிவித்தார்.

சட்டமன்றத்தில்கழக உறுப்பினர் சைதை துரைசாமி கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் கூறியதாவது:—

### புதிய பிளாட்டுகள்

கிண்டி தொழிற் பேட்டையில்சிறுதொழில் துவங்குவதற்கு புதிதாக "பிளாட்டு"கள் வழங்கபட உள்ளன. விண்ணப்பதாரர்களின் தொழில் நுட்பதகுதி- தொழில் அமைப்பு நிதி வசதிக்கான ஏற்பாடு, திட்டத்தின் செயல்முறை ஆகியவற்றை கருத்தில் கொண்டு மேம்படுத்தப் பட்ட மனைகள் சிறு தொழில் செய்வோருக்கு ஒதுக்கீடு செய்யப்படும்

### வேலையற்ற மாணவர்கள்...

வேலையற்ற தொழில் நுட்ப தகுதி பெற்றமாணவர்களுக்கு தனியாக முன்னுரிமை வழங்கப் படுவதில்லை.

இவ்வாறு அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் கூறினார்.



Edited and Published by K.RAVINDRAN on behalf of Thangam Publication and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS—600 094

# பம்பு செட் மின்சாரம் வழங்குவதில் சாதனை: பண்ருட்டியார் தகவல்

சென்னை ஜூலை19- "பம்பு செட்டுகளுக்கும்- ஆதிதிராவிடர் குடியிருப்புகளுக்கும் அதிக அளவில் மின்சார இணைப்பு வழங்குவதில் தமிழகமே முன்னோடி மாநிலமாக திகழ்கிறது" என்று சட்டப் பேரவையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தெரிவித்தார்.

மின்சார வாரிய நிதி நிலை அறிக்கை விவாதத்தைக் தொடங்கி வைத்து அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:-

விவசாயப் பெருங்குடி மக்களுக்கு— குறிப்பாக குறைந்த வருவாயுடைய விவசாயிகளுக்கு எல்லா வகைகளிலும் உதவிசெய்ய வேண்டும் என்ற இந்த அரசின் கொள்கைக்கிணங்க சிறு விவசாயிகளுக்கு 15.9 84முதல்இலவச மின்சாரம் வழங்கவேண்டுமென அரசு தீர்மானித்தது.

இந்த சலுகை ஐந்து ஏக்கா புஞ்சை, அல்லது இரண்டரை ஏக்கா நஞ்சை நிலங்களுக்குமேற்படாமல் வைத்திருக்கும் சிறு விவசாயிகளுக்குப் பயன்படும்.

மற்ற விவசாயிகளுக்கு மின் அளவை கணக்கில் கொண்டு, ஒரு குதிரை சக்திக்கு ரூபாய் 75 வசூலிக்கப்படுகிறது.

### குடிசைக்கு மின் விளக்கு

கிராமங்களில் வாழும் நலிந்த மக்களுக்கு குடிசைக்கு ஓர் மின்விளக்கு என்ற திட்டத்தினை இந்த அரசு 79ல்துவக்கியது. இதுவரை 6லட்சத்து 52 ஆயிரம் குடிசைகளுக்கு மின் இணைப்பு வழங்கப்பட்டுள்ளது.

ஏற்கனவே இவர்களிடமிருந்து 2.50 ரூபாய் கட்டணமாக வசூலிக்கப்பட்டது.

15.9.84 முதல் இந்த மின் இணைப்பு இலவசமாக வழங்கப்படுகிறது.

1984-85-ம் ஆண்டிற்கென நிர்ணயிக்கப்பட்ட குறியீட்டு அளவான 20 ஆயிரம் என்பதைஉயர்த்தி 50 ஆயிரம் பம்பு செட்டுகளுக்கு மின் இணைப்பு வழங்க வேண்டுமென்று அரசு பணித்தது.

ஆனால் இந்தக் குறியீட்டையும் மிஞ்சி 84, 85-ல் 50, 950 பம்பு செட்டுகளுக்கு மின் இணைப்பு வழங்கப்பட்டிருக்கிறது.

கல்பாக்கத்தில் 235 மெகாவாட் திறன் கொண்ட இரண்டாவது பிரிவு 85-86ல் உற்பத்தியைத் தொடங்குமென எதிர்பார்க்கப்படுகிறது.

முதல் பிரிவின் உற்பத்தி முழுவதும் இரண்டாம் பிரிவின் உற்பத்தியில்பாதியும் தமிழகத்திற்குக் கிடைக்க வேண்டுமென்று வற்புறுத்தி வருகிறோம்.

இதை மத்திய அரசு முழுவதுமாக ஏற்றுக் கொண்டுள்ளது.

தமிழ் நாடு மின்வாரியத்தின் வசம் பேசின் பிரிட்ஜ், மற்றும் எண்ணூர், தூத்துக்குடி, ஆகிய மூன்று அனல் மின் நிலையங்கள் உள்ளன-

பேசின் பிரிட்ஜ் நிலையத்தைஎரிவாயுமின் நிலையமாக மாற்றி அமைக்கும் செயற்குறிப்பு மத்திய அரசிடம் நிலுவையில் உள்ளது.

தூத்துக்குடி, எண்ணூர் அனல் மின் நிலையங்களின் செயல்திறனில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

இந்த நிலையங்களின் செயல் திறனை மேலும் உயர்த்த வாரியம் முயன்று வருகிறது.

எண்ணூர் அனல் மின் நிலையத்திற்கு ஒரு மேம்பாட்டுத்திட்டம் ரூ.42.40 கோடி செலவில் செயல் படுத்தப்பட்டு வருகிறது.

இந்தப் பணி 87ல் முடியும்.

இரண்டாவது கட்டத்திற்கு ரூபாய்37.38 கோடி செலவில் மத்திய அரசு ஏற்படுத்தியுள்ளது.

இந்தப் பணி 87-88 வரை நடைபெறும்.

ரூபாய்6..7கோடிசெலவிலான தூத்துக்குடி அனல் மின் நிலைய மேம்பாட்டு திட்டத்திற்கும் மத்திய அரசுஏற்பளித்துள்ளது.

இது 87-88ல் முடியும். அனல்மின் நிலையங்கள் திறம்பட செயல்பட, நிலக்கரி தாராளமாகத் தேவைப்படுகிறது. தாராளமாக நிலக்கரி கிடைக்க வசதி குறைவு ஏற்படுகிறது.

நமக்கு ஆண்டுக்கு 26 லட்சம் டன் நிலக்கரி தேவை.

84-85ல் 18.71 லட்சம் டன் தான் கிடைத்தது. இதனால் எரி எண்ணெயைப் பயன்படுத்த வேண்டிய நிலை ஏற்பட்டது. இதனால் நமக்குக்கூடுதல் செலவு ஏற்படுகிறது

### வட சென்னையில் அனல்மின்நிலையம்

காடம்பாறை நீரேற்று மின்நிலையம் 87 ஜனவரியில் தொடங்கும்,

மேட்டூர் அனல் மின் நிலையம் மிகப் பெரிய திட்டமாகும். இதற்கு ரூபாய்384.33 கோடிசெலவாகும்.

இதன் முதல்பிரிவு 1986 லும், இரண்டாவது பிரிவு 87லும் செயல் பட்டத் தொடங்கும்.

வடசென்னையில் ஒரு அனல்மின் நிலையம்நிறுவவும் தூத்துக்குடியில்அனல் மின் நிலையத்தை உருவாக்கவும் ஒரு திட்டம் தீட்டி மத்திய அரசுக்கு அனுப்பப் பட்டிருந்தது. ரூபாய்356கோடிசெலவில் தூத்துக்குடியில் இரண்டு பிரிவுகள் அமைக்கும் திட்டத்திற்கு மத்திய திட்டக்குழு இசைவுத் தெரிவித்துள்ளது.

வடசென்னையைப் பொறுத்தவரை547கோடி செலவில் 210 மெகாவாட் திறன்கொண்ட மூன்று பிரிவுகள் அமைக்க மத்திய மின் அதிகார மன்றம் இசைந்துள்ளது-

தற்போதுள்ள பேசின் பிரிட்ஜ் அனல் மின்நிலையத் திற்குபதிலாக ரூ.47கோடி செலவில் ஒவ்வொன்றும் 50 மெகாவாட் திறன் கொண்ட எரிவாயு மின் நிலையத்தின் இரண்டு பிரிவுகளை அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது. இது மத்திய அரசின் பரிசீலனையில் உள்ளது. 630 மெகாவாட் திறனுடன் கடலூரில் ஒரு மின் நிலையம் அமைப்பதற்கான சாத்தியக்கூறுகளை வாரியம் ஆராய்ந்து வருகிறது.

1500 மெகாவாட்திறன் கொண்ட 3-வது அனல் மின் நிலையம் அமைக்க நெய்வேலியில்திட்டமிடப் பட்டுள்ளது.

### தனிச்சிறப்பு

நெல்லை மாவட்டத்தில் கூடங்குளத்தில் ஒரு அணுமின் நிலையம் அமைக்க மத்திய அரசு முன்வருமென்று எதிர் பார்க்கிறோம்.

கிராமப்புற மின் இணைப்பில் தமிழகம் முன்னோடியாகத் திகழ்ந்து வருகிறது.

15.735 கிராமங்களில் இவ்வாண்டு மே இறுதி வரை 15,706 கிராமங்களுக்கு மின் இணைப்பு தரப்பட்டுள்ளது.

10.52,000 பம்புசெட்டுகளுக்கு மின் இணைப்பு கொடுத்து எல்லா மாநிலங்களையும் விட அதிக அளவுள்ள மாநிலமாகத்தமிழகம் விளங்குகிறது.

எல்லா ஆதிதிராவிடக் குடியிருப்புகளுக்கும் மின் இணைப்பு வழங்கிய தனிச்சிறப்பு தமிழகத்திற்கு உண்டு.

85—86ல் 40 ஆயிரம் பம்பு செட்டுகளுக்கு மின் இணைப்புத் தர திட்டமிடப்பட்டுள்ளது.

மின்சார வாரியத்திற்கு 146 கோடி ரூபாய் துண்டு விழுகிறது.

மின்சார வாரிய ஊழியர்களின் ஊதியம்குறித்து திருத்திய ஒப்பந்தம் ஏற்படுவதற்கு தொழிற்சங்கத்துடன் பேச்சு வாத்தை நடந்து வருகிறது.

விரைவில் இது முடியுமென எதிர் பார்க்கப்படுகிறது.

ஒப்பந்தம் ஏற்படுவதற்கு முன்னர் இடைக்கால உதவியாக ரூபாய 350 இவ்வாண்டு ஏப்ரல் வழங்கப் பட்டது.

இவ்வாறு பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்,

## நாட் குறிப்பு

### திருப்பூர்

திருப்பூர் பகுதி கழகம் சார்பில் கழகப்பொதுக் கூட்டம் 21—ந் தேதி மாலை டும்லைட் மைதானத்தில் நஜ்முதீன் தலைமையில் நடைபெறுகிறது, இக்கூட்டத்தில், கவிஞர் முத்துராமலிங்கம், வீட்டுவசதி வாரியத் தலைவர் திருப்பூர் மணிமாறன், பழனிசாமி, கேசவன், அய்யப்பன், முருகசாமி, சதாசிவம், சிங்காரவேலன், சாமிநாதன், மணி, இசாக், சம்பத்குமார், ஜின்னா, குணசேகரன், சண்முகம், சேகர் மற்றும் பலர் பேசுகின்றனர்.

### பழனி

பழனி நகர கழகம் சார்பில் கழகப் பொதுக் கூட்டம் வரும் 23ந் தேதி மாலை பழனி அடிவாரம் பாரதி திடலில் மாணிக்கம் தலைமையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில்தமிழ் நாடு விவசாய விளை பொருள் வாரியத் தலைவர் மதுரை எஸ்.பாண்டியன், சட்டமன்ற உறுப்பினர்கள் அன்பழகன், பாலுச்சாமி மற்றும் பரதன், ஜோதிமணி மோகன். வேலன், முத்து, பகவதி மகாலிங்கம் ஆகியோர் பேசுகின்றனர்.

இரவு ராமகிருஷ்ணன் கவிதாவின் கலைநிகழ்ச்சி நடைபெறும்.

# ஒவ்வொரு மாவட்டத்திலும் மத்திய அரசு மாதிரி பள்ளி

புதுடெல்லி, ஜூலை. 19—

ஒவ்வொரு மாவட்டத்திலும் மத்தியஅரசு ஒருமாதிரி பள்ளியை அமைக்கும்.

இத்தகவலைமத்தியகல்வி அமைச்சர் கே.சி.பந்த் தெரிவித்தார். கல்வி ஆராய்ச்சி மற்றும் பயிற்சிக்கான தேசிய கவுன்சிலின் நிர்வாகக் குழுவின் கூட்டத்திற்கு தலைமை வகித்து பேசுகையில் இத்தகவலை அவர் தெரிவித்தார்.

இம்மாதிரி பள்ளிகள் பிறர் பின்பற்றும் நிறுவனமாகவும் பொதுவான பாடதிட்டங்களில் நாடு முழுவதும் செயல்படுத்தப்படவிருக்கின்றன, உள்ளூர் நிலைமைகளுக்கு ஏற்ப சில மாறுதல்கள் செய்யப்படலாம்.

கிராமப்புறங்களிலிருந்தும் சமுதாயத்தின் பிந்தபிரிவினைச் சேர்ந்த பெரும்பாலான மாணவர்கள் இதில் பெருமளவில் இடம்பெறுவர், ஏழைக் குடும்பங்கள் மற்றும் கிராமப் பகுதிகளைச் சேர்ந்த திறமைமிக்க குழந்தைகள் தங்கள் திறனை மேலும் வளர்த்துக்கொள்ள மாதிரிபள்ளிகள் சிறந்த சோதனைச் சாலையாக விளங்கும் என்று அமைச்சர் நம்பிக்கை தெரிவித்தார்.

# ஆதரவற்ற பெண்கட்கு திருமண நிதி உதவி

## புரட்சித்தலைவர் உத்தரவு

**சென்னை, ஜூலை 19- ஆதரவற்ற பெண்களுக்குத் திருமண உதவித் தொகையாக ஆயிரம் ரூபாய் அளிக்கப்படுமென்று புரட்சித்தலைவர் ஆணை பிறப்பித்துள்ளார்.**

இது தொடர்பாக அரசு வெளியிட்டுள்ள செய்தி குறிப்பு வருமாறு:-

தமிழக அரசினால் ஆதரவற்ற பெண்கள் திருமணத்திற்கு ஒரு பெண்ணுக்கு ரூ.1000 நிதி உதவி அளிக்கும் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

இந்த உதவி பெறுவதற்கு கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு மனுதாரர்கள் உட்பட்டிருக்க வேண்டும்.

ஆதரவற்ற பெண் என்பதற்கு அத்தாட்சி-யனைடைவோரின் ஆண்டு வருமானம் ரூ. 3000-க்கு அதிகமாகாமலிருக்கவேண்டும். இதற்கு வட்டாட்சியரின் சான்று இணைக்கப்படவேண்டும்.

மணப்பெண்ணின் வயது 18லிருந்து 30க்குள் இருக்க வேண்டும். இந்தத் திருமணம் முதல் திருமணமாகவும் இருக்க வேண்டும். இதற்கு வட்டாட்சியர் சான்றும் எஸ். எஸ். எல். சி. சான்றும் இணைக்கவேண்டும்.

இந்த நிதி உதவி ஒரு குடும்பத்தில் ஒரு மணப்பெண்ணுக்கு மட்டுமே தகுதி உடையதாகும். இந்தச்சான்று வட்டாட்சியரும் மணப்பெண்ணும் அளிக்க வேண்டும்.

இந்த நிதி உதவி கோரி விண்ணப்பம் வேண்டுவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு அணுகலாம்.

சமூகநலத்துறை இயக்ககம்,
485, அண்ணாசாலை
நந்தனம், சென்னை—
600035



# ஆதி திராவிடர்களுக்கு 10ஆயிரம் வீடுகள்:

## அருணாசலம் தகவல்

சென்னை, ஜூலை19 ஆதிதிராவிடர்களுக்காக இந்த ஆண்டு 10 ஆயிரம் வீடுகள் கட்ட அரசு பரிசீலித்து வருகிறது என்று அமைச்சர் அருணாசலம் கூறினார்.

சட்டமன்றத்தில் கேள்வி நேரத்தின் போது பதிலளிக்கையில் அமைச்சர் அருணாசலம் கூறியதாவது:-

ஆதிதிராவிடர்களுக்காக தமிழகம் முழுவதும் இதுவரை 2,53,795 வீடுகள் கட்டித் தரப்பட்டுள்ளது.

ஆதிதிராவிடரல்லாத மற்றவர்கள் அந்த வீடுகளில் குடியிருந்தால் அவர்களை வெளியேற்றி அந்த வீடு ஆதிதிராவிடர், நலவீட்டு வசதிக்கழகமே திரும்ப எடுத்துக் கொள்கிறது.

இந்த ஆண்டு ஆதிதிராவிடர்களுக்காக சுமார் 10 ஆயிரம் வீடுகள் கட்டுவது பரிசீலனையில் உள்ளது.

இவ்வாறு அமைச்சர் அருணாசலம்கூறினார்.

### அமைச்சர் முத்துசாமி

சட்டப்பேரவையில் கழக உறுப்பினர் தாம்பரம் எல்ல ராசமாணிக்கம் கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:—

தாம்பரத்திலிருந்து மதுராந்தகம் அருகேயுள்ள புக்கத்துறை வரை சுமார் 39 கி. மீட்டர் நீளத்திற்கு இருவழித் தடத்தை வலுப்படுத்தி அதற்குப் பக்கத்தில் மற்றொரு இருவழித் தடத்தை அமைப்பதற்காகவும் — புக்கத்துறையிலிருந்து விழுப்புரம் வரை 93 கி மீட்டர் நீளத்திற்கு இப்போதுள்ள சாலையை வலுப்படுத்துவதற்காகவும் மத்திய அரசு அனுமதி யளித்துள்ளது.

உலகவங்கி உதவியுடன் 52 கோடியே 279 லட்சம் ரூபாய் செலவில் இப்பணிகளை மேற்கொள்வதற்காக மதிப்பீடுகள் மைய அரசுக்கு அனுப்பப்பட்டுள்ளன. இதற்கிடையில் நிலஆர்ஜிதம் செய்யப்பட்டு வருகின்றன.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

### நியமனம்

தஞ்சாவூர், ஜூலை18- தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக செனட் குழுவிற்கு எஸ். ராஜாராமன், மாரிமுத்து ஆகிய இருவரும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

# ரூபாய் 10 செலுத்தினால் 33,500 கிடைக்கும்

## அரசின் புதிய திட்டம்

கடலூர் ஜூலை 19- மாதம் 10 ரூபாய் கட்டினால் 33,500 ரூபாய் வழங்கும் திட்டம் தென்னாற்காடு மாவட்டத்தில் தீவிரமடைந்துள்ளது.

இத்திட்டத்தின் கீழ் இந்த மாதத்தில் மட்டும் 5816 பேர் உறுப்பினராக சேர்ந்துள்ளனர் என்று மாவட்ட கலெக்டர் குணாளன் நிருபர்களிடம் தெரிவித்தார்.

அவர் மேலும் கூறியதாவது:—

தமிழக அரசு அறிவித்துள்ள ஈட்டுறுதியுடன் இணைந்த ஓய்வு உதவி இறப்புத் திட்டத்தில் 18 வயது முதல் 58வயதுவரம்புடைய அனைத்து விவசாய தொழிலாளர்கள், சிறுநிலமுள்ளவர்கள், கைவினைஞர்கள், சுமை தூக்கும் தொழிலாளர்கள் ஆகியோருக்கும் பொருந்தும்.

இவர்கள் ரூபாய் 10 அரசு கருவூலத்தில் செலுத்தி இந்த திட்டத்தில் உறுப்பினர்களாகச் சேர்ந்து பிரதி மாதம் ரூபாய் 10 செலுத்தி வரவேண்டும். இவர்கள் 58 வயது முடிந்ததும் ஓய்வு பெற்றவர்களாக கருதப்படுவார்கள். ஓய்வு பெற்றதும் இவர்கள் அதுவரை நாற்பது ஆண்டுகள் செலுத்திய தொகை ரூ. 4,800க்கு மொத்த தொகையாக ரூ 33,500 வழங்கப்படும். அதற்குள் இறந்து விட்டால் ரூ. 5 ஆயிரமும். அவர்கள் செலுத்திய தொகை மற்றும் வட்டியுடன் சேர்த்துகொடுக்கப்படும். இத்திட்டம் ஈட்டுறுதி கழகத்துடன் சேர்ந்து செயல்படும்.

தென்னாற்காடு மாவட்டத்தில் முதியோர் உதவி தொகை 11,522, பேர்களும். ஆதரவற்ற விதவைகள் 6,384 பேர்களும் ஊனமுற்றோர்கள் 1,41 பேர்களும் ஆதரவற்ற விவசாயக் கூலிகள்4, 391 பேர்களும் அரசால் உதவி தொகை பெற்று வருகிறார்கள்.

### இலவசபாட புத்தகங்கள்

286 சலவை தொழிலாளிகளுக்கும், 62 முடி திருத்துவோர்களுக்கும் 30 கல்லுடைக்கும் தொழிலாளிகளுக்கும் தொழிற்கருவிகள் கடந்த ஆண்டு வழங்கப்பட்டது. கடந்த ஆண்டு பிற்படுத்தப்பட்ட இனத்தைச் சார்ந்த பள்ளிப் படிப்பிற்கும் மேற்பட்ட கல்வி பயிலும் மாணவ - மாணவியர்களுக்கு கல்வி உதவி தொகையாக ரூபாய் 13 லட்சத்து 96 ஆயிரம் வழங்கப்பட்டது. அத்துடன் பள்ளி படிப்புக்கு மாணவ மாணவிகளுக்கு கல்விக்கட்டணத் தொகையாக ரூபாய் 67,940 வழங்கப்பட்டது

## காமராஜ் சிலை திறப்பு

### புரட்சித் தலைவர் வாழ்த்து

சென்னை, ஜூலை 19— டெல்லியில் நேற்று பெருந்தலைவர் காமராஜ் சிலை திறப்பு விழா நடைபெற்றது. இவ்விழாவினையொட்டி முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்துச்செய்தி ஒன்றை அனுப்பியிருந்தார்.

அதில் அவர் கூறியிருப்பதாவது:-

காமராஜர் வாழ்க்கை போராட்டங்கள் நிறைந்தது. எளிமையான வாழ்க்கையைத் தொடங்கி இந்தியாவின் தேசியத் தலைவராக உயர்ந்தார். ஏழை மக்கள் மனதில் நம்பிக்கையையும். தைரியத்தையும் ஊட்டினார்.

இந்தியத் தலைநகரில் காமராஜர் சிலையைப் பிரதமர் திறந்துவைப்பது அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். இது தமிழக மக்கள் அனைவரும் மகிழ்ச்சி அடையும் நாள்.

இவ்வாறு அந்த வாழ்த்துச் செய்தியில் புரட்சித் தலைவர் கூறியுள்ளார்.

ராகுகாலம் -- எமகண்டத்தில் விதவைகள் தாலி எடுத்துக் கொடுக்க திருமணம் செய்து கொண்ட ஜவகர் கலைச்செல்வி

### சட்டமன்ற உறுப்பினர்கட்கு வாழ்த்து

சென்னை, ஜூலை 18- உலக இளைஞர் ஆண்டையொட்டி சோவியத் ரஷ்யாவுக்குச் செல்லும் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு இன்று பேரவை தலைவர் பி.எச். பாண்டியன் வாழ்த்துக்களைத் தெரிவித்தார்.

சட்டமன்றத்தில் கேள்வி நேரம் முடிந்தவுடன் எதிர்க்கட்சித் தலைவர் உ. சுப்பிரமணியம் எழுந்து "உலக இளைஞர் ஆண்டையொட்டி சட்டமன்ற உறுப்பினர்கள் முருகானந்தம், கே.பி. ராமலிங்கம் பிரேம் குமார், தங்கமணி ஆகியோர் உலக இளைஞர் கருத்தரங்கில் கலந்து கொள்ள சோவியத் நாட்டுக்குச் செல்வதால் அவர்களுக்கு சபாநாயகர் வாழ்த்துத் தெரிவிக்கவேண்டும்என்று கூறினார்.

அதற்கு பதிலளிக்கும் வகையில் சபாநாயகர் பி.எச்.பாண்டியன் பேரவையின் சார்பிலும் என் சார்பிலும் இளைஞர் என்ற காரணத்தால் அவர்களை வாழ்த்துகிறேன் என்று கூறினார்.

# ராகுகாலம்- எமகண்டத்தில் ஆட்டுகறிவிருந்துடன் திருமணம்

ஆத்தூர், ஜூலை 19- என்னதான் சுயமரியாதை பேசுகிறவர்களும் ராகு காலத்திற்காகக் காத்திருந்து எமகண்டத்தில் தனது பிள்ளைக்கு திருமணம் நடத்துவது அபூர்வம், சேலம் மாவட்டம் ஆத்தூரைச் சேர்ந்த வர்த்தகப் பிரமுகரும், வெள்ளைச்சேலை ஒழிப்பு-விதவைகள் மறுவாழ்வு இயக்கத்தலைவருமான ஆத்தூர் முத்துசாமி தனது மகனுக்கு சாதி, சம்பிரதாயங்களை எதிர்த்து எதிர்நீச்சல் போட்டுதிருமணம்நடத்தினார்.

வெள்ளைச் சேலை ஒழிப்பு- விதவைகள் மறுவாழ்வு இயக்க மாநில மாநாட்டில் தனது மகன் ஜவகர் திருமணத்தை முத்துசாமி நடத்தினார்.

திருமணம் முடிந்ததும் "வெள்ளைச் சேலை முறை ஒழிக" "விதவைகள் மீது கொடுமை ஒழிக" என்று ஒழிக முழக்கமிட்டு தன்மகன் திருமணத்தை முடித்தார் அந்த இயக்கத்தலைவர் முத்துசாமி.

முத்துசாமி பேசும் போது கூறியதாவது:-

இங்கே எனது மகன் ஜவகருக்கும், கலைச்செல்விக்கும் ராகுகாலம் வரை காத்திருந்து திருமணத்தை நடத்தினேன். 8 பவுன் தாலி கட்டப்பட்டது. மணமக்கள் வடக்குபக்கமாக உட்கார வைக்கப்பட்டிருந்தனர். விதவைகள் மங்கல நாணைஎடுத்துக்கொடுக்க திருமணம் நடந்தது!

நாளையே என்மகன் இறந்துவிட்டால் இந்த திருமணமுறையை சபிக்காதீர்கள். நல்ல நாள் பார்த்து திருமணம் செய்தவர்களும் உடனே இறப்பதை பார்க்கிறோம்.

விதவைகளை வாழ வைக்கவேண்டும். அவர்களை அபசகுனமாகக் கருதும் நிலைகூடாது. விதவைகள் வெள்ளைச் சேலை அணியும் முறை ஒழியவேண்டும்.

இவ்வாறு மாநாட்டில் முத்துசாமி பேசினார்.

பொதுவாக திருமண விழாவில் மாமிச உணவு பரிமாறப்படுவதில்லை. ஆனால் முத்துசாமி வீட்டு திருமணத்தில் வந்திருந்த அனைவருக்கும் ஆட்டுக்கறி பிரியாணி பரிமாறப்பட்டது.



# பள்ளி கட்டிடங்கள் கட்ட எல்.ஐ.சி. யிடம் கடன் பெற முயற்சி

## அமைச்சர் அரங்கநாயகம் தகவல்

சென்னை. ஜூலை 19— பள்ளிக்கூட கட்டிடங்களை கட்ட ஆயுள் இன்சூரன்சு கார்ப்பரேஷனிடம் கடன் பெற அரசு முயற்சிப்பதாக அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்தார்.

சட்டமன்றத்தில் கழக உறுப்பினர் மா. சின்னராஜ் கேள்விக்குபதிலளிக்கையில் அமைச்சர் அரங்கநாயகம் கூறியதாவது!

உயர்நிலைப்பள்ளிகளில் கட்டிடங்கள் கட்டுவது அரசு நிதிநிலைக்கு ஏற்ப நிதி ஒதுக்கம் செய்யப்பட்டு வருகிறது.

ஆயுள் காப்பீட்டுக்கழகத்தில் கடனுதவி பெற்று கட்டுவதற்கு முயன்ற போது மத்திய அரசிடமிருந்து அனுமதி வருவதற்குள் ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் கடன் உதவித் தொகைகள் மற்ற பணிகளுக்கு பகிர்ந்த கொடுக்கப்பட்டு விட்டன

வங்கிகளின் உதவியுடன் இந்தக் கட்டடங்களை கட்டுவதற்கு முயன்றபோது அனுமதி கிடைக்கவில்லை. மீண்டும் ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் மூலம் அனுமதி பெற்று கட்ட முயற்சித்து வருகிறோம்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.







# மாஸ்கோவில் இளைஞர் மாநாடு: தமிழக எம்.எல்.ஏ.க்கள் பயணம்:

சென்னை. ஜூலை 19— சோவியதரஷ்யாவில் நடைபெறும் உலக இளைஞர் விழாவில் கலந்து கொள்ள சட்டமன்ற கழக உறுப்பினர்கள் கே.பி. ராமலிங்கம் தங்கமணி, பிரேம் குமார் ஆகியோர் செல்கிறார்கள்.

இந்த ஆண்டு இளைஞர்களின் ஆண்டாக கொண்டாடப்படுகிறது. இதையொட்டி உலக இளைஞர்கள் திருவிழா சோவியத் ரஷ்யாவின் தலைநகரான மாஸ்கோவில் ஜூலை 26 முதல் ஆகஸ்டு 3ந்தேதி வரை நடை பெறுகிறது. பல் வேறு நாடுகளைச் சேர்ந்த பிரதிநிதிகள் கலந்து கொள்கிறார்கள்.

இம்மாநாட்டில் தமிழ்நாடு சட்டமன்ற கழக உறுப்பினர்கள் டாக்டர் கே.பி. ராமலிங்கம் பிரேம்குமார், தங்கமணி ஆகியோர் செல்கிறார்கள்.

இ. காங்கிரஸ் சார்பில் தங்கபாலு எம். பி., ஜெயமோகன் எம் பி., முருகானந்தம் எம். எல். ஏ. சக்திவடிவேல், பேரூர்வரதன், இனியன் சம்பத் ஆகியோர் செல்கின்றனர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் டி. ராஜா, ஸ்டாலின், குணசேகரன் ஆகியோரும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து நன்மாறன் அகத்திலிங்கம் ஆகியோரும் செல்கிறார்கள்.

இவர்களுடன் செல்வி வித்யாசுப்பிரமணியத்தின் பரத நாட்டிய குழுவினரும் வயலின் கலைஞர் தியாகராஜனும் உலக இளைஞர் விழாவில்சலந்து கொள்ளச் செல்கிறார்கள்

இந்த குழு சென்னையிலிருந்து டெல்லி சென்று ஜூலை 23—ந் தேதி மாஸ்கோ புறப்படும்.

# அமைச்சர் நிகழ்ச்சிகள்

### அணடெ

ஜூலை - 21 செங்கற்பட்டு இந்தோ சோவியத் கலாச்சார கழக மகாநாட்டில் பங்கு பெறுதல்.

5.30 மாலை முன்னித்தி குப்பம்

6.30 மாலை மதுராந்தகம்.

இரவு 8.00மணி முருக்கம்பாக்கம் இரவு தங்கல்: - படாளம்

ஜூலை 22. 9.30 மணி மேல் மருவத்தூர்

பகல் 11. 45 மணி சென்னை.

# வெள்ளை சேலை அணிய மாட்டோம்: விதவைகள் சபதம்

ஆத்தூர், ஜூலை 19- சாத்திரம். சம்பிரதாயங்களுக்குள் முடங்கிக் கிடந்த சேலம் ஆத்தூர் விதவை தாய்மார்கள் பலர், வெள்ளைப் புடவை கட்ட மாட்டோம் என்று சபதம் பூண்டனர்.

கண்டாங்கி சேலையுடன் விதவைப்பெண்கள் ஊர்வலமாக வந்தனர்,

வெள்ளைச் சேலை ஒழிப்பு விதவை மறுவாழ்வு இயக்க மாநில மாநாடும், அந்த இயக்க தலைவர் ஆத்தூர் முத்துசாமியின் மகன் ஜவஹர், கிருஷ்ணன் மகள் கலைச்செல்வி ஆகியோர் திருமணம் நடந்தது. இந்த நிகழ்ச்சிகளையொட்டி காலை 9 45 மணிக்கு ஆத்தூர் வேல்முருகன் சினிமா தியேட்டர் முன்பு இருந்து ஊர்வலம் புறப்பட்டது. 10 வார்களிலும் 14டிராக்டர்களிலும்பெண்கள் ஊர்வலத்தில் வந்தனர்.

மற்றும் கார்கள், மோட்டார் சைக்கிள், சைக்கிள்களிலும் நடந்துமாக 50 ஆயிரம் பேர் ஊர்வலத்தில வந்தனர். 10 மேளவாத்திய கோஷ்டிகள் தனித்தனியாக வாசித்து ஊர்வலத்தில் வந்தனர்.

வாணவேடிக்கை செய்யப்பட்டது. ஊர்வலம் காந்திசிலை உடையார் பாளையம் வழியாக வந்தது. பெரியார்சிலைகொடிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. முத்துசாமி மாலை அணிவித்தார். பின் கடைவீதி வழியாக புதுப்பேட்டை வந்தது.

ஊர்வலத்தை பார்க்க 1 மைல் தூரம்ரோடுஓரங்களில் சில மணி நேரமாக பல ஆயிரம் ஆண் பெண் காத்துநின்றுகண்டுகளித்தது வியப்பாகஇருந்தது12.30 மணிக்கு அம்மபாளையம் அன்பு ரைஸ் மில்லை வந்து அடைந்தது.

அங்கு போடப்பட்டிருந்த பிரம்மாண்டமான பந்தலில் கம்பீரமான மேடையில் திருமணம் நடந்தது, விதவைகள், மனைவியைஇழந்தவர்கள் திருமாங்கல்யத்தை எடுத்துக்கொடுத்த, மணமகன் தாலி கட்டினார். மணமக்கள்வடக்கு பக்கமாக வைக்கப்பட்டிருந்தனர். திருமணம் ராகுகாலம் எமகண்டத்தில் நடந்தது.

மாநாட்டில் ஊர்வலத்திலும் ஆயிரக்கணக்கான கலர் சேலை அணிந்த விதவைகளும் விதவை மறுமணத் தம்பதிகளும் கலந்து கொண்டனர். அனைவருக்கும் மாமிச (பிரியாணி) உணவு பரிமாறப்பட்டது பழைய எம்.எல்.ஏ. பி. துரைசி, பழனிமுத்து. எம்எல்ஏ., சென்னையைச் சேர்ந்த என்ஜினியர் கோவிந்தசாமி, ஒட்டன் சத்திரம செல்லமுத்து. கே.டி, தர்மலிங்கம். (ஆசிரியர் தென்னங்குடிபாளையம்) நாடாளுமன்ற கழக உறுப்பினர் பி.கண்ணன், கோவிநதராஜி, அ.பொ. திருவேனிநாதன் உள்படபலர் பேசினர். நூற்றுக்கணக்கான ப்ரமுகர்கள் கலந்து கொண்டனர்.

மாநாடு மேடையில் தையல்நாயகி என்ற விதவையை முரளிதரன் என்ற வாலிபர் திருமணம் செய்து கொண்டார். பாஞ்சாலை என்ற விதவைப் பெண்ணை தங்கவேல் என்ற வாலிபர் மணந்தார்.

## தி.மு.க. தலைவருக்கு வீழ்ச்சி ஏன்?

# கெடுவான் கேடுநினைப்பான் டாக்டர் நாவலர் பேச்சு

சென்னை, ஜூலை 19— கெடுவான் கேடு நினைப்பான் என்பார்கள். அப்படிப்பட்ட நிலைமையால் தி.மு.க தலைவர் தோல்வி காண்கிறார் என்று நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

சென்னை 87வது வட்டம் சிங்கண்ண செட்டித் தெருவில் நடைபெற்ற கழகக் கூட்டத்தில் பங்கேற்று நிதியமைச்சர் டாக்டர் நாவலர் பேசினார்.

அவர் பேசுகையில் கூறியதாவது:-

ஜனநாயக நாட்டில் மக்கள் ஜனநாயகத்தில் பிடிப்புடன் இருக்க வேண்டும். மத்திய மாநில அரசுகள் செய்யும் பணிகளை மக்கள் கண்காணிக்கவேண்டும், அப்போது தான் ஜனநாயகம் வளரும். விளக்கங்களை கேட்பதில் உங்களுக்குக் கவலை இல்லாமல் இருக்கலாம், ஆனால் விளக்கங்கள் தருவது எங்கள் கடமை.

### அண்ணா வழியில்...

அண்ணா தான் வகுத்த திட்டங்களுக்கு, கொள்கைகளுக்கு மக்களிடம் விளக்கம் தந்து மக்களின் அன்பையும், அரவணைப்பையும் பெற்றார். அண்ணாவழியில்புரட்சித் தலைவர் எப்படிப்பட்ட கடமைகளை ஆற்றுகிறார் என்பதை சொல்வது எங்கள் கடமை.

மக்கள் அன்பையும்ஆதரவையும் பெற்று மக்களின் வாழ்த்தையும், வரவேற்பையும் பெற்று மூன்றாம் முறையாக முதல்வர் புரட்சித்தலைவர் முதல்வராகி உள்ளார். பண்டைய காலத்தில் நடந்தது போல்போர் படை நடத்தியா போரிட்டோ முதல்வர் புரட்சித் தலைவர் கோட்டையை பிடிக்கவில்லை, மக்களின் அன்பைக் கொண்டு கோட்டையைப் பிடித்துள்ளார்.

கருணாநிதி எப்படிப்பட்ட கூற்றுக்களை சொன்னாலும், மக்கள் மன்றம் நம்மைப்பற்றி என்ன சொல்கிறதுபுரட்சி தலைவரிடத்தில் எப்படிப்பட்ட அன்பைக் காட்டுகிறது என்பதுதான் மூன்றாம் முறையாகவும் புரட்சித்தலைவர் முதல்வரானது.

### மாற்றார் கருத்துக்கு மதிப்பு

கருணாநிதி கூறுவது பற்றி கவலை இல்லை அவர் மாற்றார் கருத்துக்கு மதிப்புரை தர மாட்டார்.

படித்தவர்கள் அரசியலுக்கு அதிகம்வரவேண்டும், அண்ணாவின் கருத்தைக் கேட்டு பல படித்தவர்கள் அவரைப் பின்பற்றினர், ஒரு ஊராட்சி மன்ற உறுப்பினர் கூட இல்லாதிருந்த திமுகவை தனது நாவன்மையாலும், எழுத்தாற்றலாலும் அண்ணா ஆட்சிக்கட்டிக் கட்டிலில் அமரச் செய்தார்.

அண்ணா உருவாக்கிய திமுக புரட்சித்தலைவர் தலைமையில் உள்ளது. கருணாநிதி தலைமையிலும் வேறு ஒரு திமுக இருக்கிறது. அண்ணா வழி செல்லும் புரட்சித் தலைவர் அண்ணாவின்பெயர் என்றும் நிலைத்திருக்கும் வகையில் அண்ணாவின் உருவத்தை கட்சிக் கொடியில் பொறித்தார். இந்த நாடு இருக்கும் வரை அண்ணாவின் புகழ், பெயர் இருக்கும்.

### திண்டுக்கல் வெற்றி

1973ம் ஆண்டிலிருந்து புரட்சித்தலைவரை வீழ்த்த கருணாநிதி எவ்வளவோ முயன்று வருகிறார், ஆனால் முடியவில்லை. கழகம்தொடங்கிய 9வது மாதத்தில் திண்டுக்கல் இடைத்தேர்தல் வந்தது, அந்தத் தேர்தலில் கழகத்தை எதிர்த்து இந்திரா காங்கிரஸ் காமராஜரின்கட்சியான சிண்டிகேட் தி.மு.க.இவைகளெல்லாம் நின்றன. கருணாநிதி புரட்சித்தலைவருக்கு எதிராக எவ்வளவு பிரசாரம் செய்ய வேண்டுமோ, அவ்வளவும் செய்தார். இருந்தும் திண்டுக்கல்லில் கழகம் மாபெரும் வெற்றிகண்டது. தி.மு.க.வுக்கு இரண்டாவது இடம் கூட கிடைக்கவில்லை, மூன்றாவது இடத்திற்குத் தள்ளப்பட்டது. திண்டுக்கல்தேர்தலின் முடிவு மக்கள் ஆதரவு கருணாநிதிக்கு இல்லை என்பதை உருவாக்கியது. கருணாநிதி திறமைசாலியாக இருக்கலாம். ஆனால் நாட்டு மக்கள் அளித்த தீர்ப்பு என்ன என்பதை அவர் எண்ண மறுத்து விட்டார்.

### கேலிப் பேச்சு

திண்டுக்கல் தேர்தலை தொடர்ந்து நடைபெற்ற அனைத்து இடைத் தேர்தல்களிலும் கழகம் மாபெரும் வெற்றி கண்டது. 1977-ம் ஆண்டு தேர்தலில் புரட்சித் தலைவரைப் பற்றி கருணாநிதி எவ்வளவு கேவலமாக பேச முடியுமோ அவ்வளவும் பேசினார்.

தமிழ் அகராதியில் இல்லாத வார்த்தைகளையெல்லாம் கூறிக் கூட அவருடன் இருப்போர் பேசினார்கள். எம்.ஜி.ஆருக்கு அரசியல் தெரியாது. அவர் ஒரு கோழைகண்டியில்பிறந்த அவருக்கு நீங்கள் ஏன் ஆதாவு தருகிறீர்கள். என்றெல்லாம்கேட்டார்.

புரட்சித்தலைவரைப் பற்றிக் கருணாநிதி பேசப் பேசத்தான் புரட்சித் தலைவருக்கு மக்கள் அதிக ஆதரவு தந்தனர். மதுரை மாநகராட்சிக்கு நடைபெற்ற தேர்தலில் 47 இடங்களை கழகம் கைப்பற்றியது. 5 இடங்கள் தான் தி.மு.க.வுக்கு கிடைத்தன.

1979-ம் ஆண்டு நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் கழகம் தோல்வியுற்றது. இத்தோடு எம்.ஜி.ஆர், கதை முடிந்தது என்றெல்லாம் கூறினார்கள். ஆனால் புரட்சித்தலைவர் மீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை அவரை மீண்டும் ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தியது.

### பெரியகுளம் தேர்தல்

பெரியகுளம் இடைத் தேர்தலின் போது கடுமையான வறட்சி நிலவிய நேரம். அந்தத் தேர்தலின் போது தி.மு.க. இறந்த நாடாளுமன்ற உறுப்பினர் பெயரில் அனுதாப அரசியல் நடத்தியது. காங்கிரஸ் கூட தனித்துப் போட்டியிட்டது ஏறத்தாழ 20 பேருக்கு மேல் போட்டியிட்டனர்.

நான் கூட இத்தனைபேர் இந்தக் குளத்தில் (பெரியகுளம்) குதிக்கிறார்களே ஏன் என்று நினைத்தேன். அதுபெரியகுளம் அல்லவா அந்தக் குளத்தில் குதித்து மீண்டவர்கள் இரண்டு பேர், கரை சேர்ந்தவர் மீனவ நண்பர் புரட்சித் தலைவர் தான்.

திருச்செந்தூர் இடைத் தேர்தல் வந்தது, சுப்பிரமணியபிள்ளைஎன்பவரின் பிணத்தை வைத்து திமுக அரசியல் நடத்தியது. மக்களுக்குத் தெரியும் யார் நல்லவர்கள், யார் கெட்டவர்கள் என்று. எனவே அந்தத் தேர்தலிலும் கழகத்திற்கு மாபெரும் வெற்றி தந்தனர். திருச்செந்தூரில் படகோட்டி தான் கரை ஏறினார்.

### நாடே அழுதது

அண்ணா உடல் நலிவுற்ற போது நாடே அழுதது. அண்ணா மக்களிடம் அன்பையும், புகழையும் நிலை நாட்டினார், அதனால் நாடே அழுதது. புரட்சித்தலைவர் நலிவுற்ற போதும் நாடே அழுதது. தேர்தல் வந்தது, அதில் கழகம் மகத்தான வெற்றி கண்டது. அனுதாபத்தை வைத்து நாம் வெற்றி பெற்றதாக கருணாநிதி கூறினார். அனுதாபம் என்றதுஎன்றால் 1973, 1977, 1980ம் ஆண்டு நடைபெற்ற தேர்தல்களில் புரட்சித்தலைவர் வெற்றி பெற்றாரே அப்போது எந்த அனுதாபம் இருந்தது.

திருச்செந்தூர்தேர்தலில் சுப்ரமணிய பிள்ளை பிணத்தை வைத்து அனுதாப அரசியல் நடத்தியவர்கள்திமுகவினர்தான்.

புரட்சித்தலைவரை எப்படியாவது தோற்கடிக்கவேண்டும்என்பதற்காக பிண அரசியல் நடத்தியவர் கருணாநிதி. சுப்பிரமணிய பிள்ளையை கொலை செய்தது அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகத்தினர் என்றார். அப்படியானால் அதை ஏன் கோர்ட்டுக்கு வந்து சாட்சி சொல்லவில்லை. கொலை செய்தாலும் செய்திருக்கலாமென்றால் எந்தக்கோர்ட் ஏற்கும். இங்கு தெரியாமல் இருக்கலாம், திருச்செந்தூரிலுள்ள மக்களுக்கு உண்மை தெரியாமலா இருக்கும். கழகத்தவர் தான் கொலைக்கு காரணம் என்றால், கழகத்துக்கு யாராவது வாக்களித்திருப்பார்களா?

### கழகம் வெற்றி

வண்ண வண்ண போஸ்டர்களை கருணாநிதி ஒட்டிய பிறகும் முந்தைய தேர்தலைவிட, 600வாக்குகள் கழகத்துக்கு அதிகம் தந்து மக்கள்வெற்றியைத் தந்தனர்.

மக்களின் நன்மதிப்பை பெற்று தூய்மையான, நேர்மையான, கறைபடியாத காத்தோடு புரட்சித் தலைவர் ஆட்சி நடத்தி வருகிறார்.

கடந்த தேர்தலின் போது புரட்சித்தலைவர் இங்கு இல்லாத நேரத்தில் நாம் தேர்தலை சந்தித்தோம். கருணாநிதி தமிழகம் முழுவதும் சூறாவளி சுற்றுப்பயணம் செய்தார். ஆனால் புரட்சித்தலைவர் 10 ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து இங்கு போட்டியிட்டார், அவரது பெயரைச் சொல்லி நாமும் போட்டியிட்டோம்.

14 கட்சிஎன்ற பெயரில் கருணாநிதியும் அவரது கூட்டாளிகளும் நம்மைப் பற்றி எவ்வளவு இழிவாக பேசமுடியுமோ அவ்வளவு இழிவாகப் பேசினார்கள், இருந்தும் மக்கள் நம் அணிக்கு 198-இடங்களை தந்தனர், நம்மீது புழுதி வாரி தூற்றியவர்களுக்கு 36-இடங்களை மட்டுமே மக்கள் தந்தனர்.

ஒரு கட்சி (Party) என்ற தகுதியை இழந்து இன்று ஒரு குடும்பம் என்ற அளவுக்கு தி.மு.க. ஆகி இருக்கிறது, கெடுவான் கேடு நினைப்பான் என்பார்கள். கருணாநிதிக்கும் அதனால் தான் தோல்வி ஏற்படுகிறது. கருணாநிதி மாற்றாரை மதிக்கத் தவறியதால் தோல்வி காண்கிறார்.

அண்ணா முதல்வராக இருந்தபோ எதிர் கட்சி வரிசையிலிருந்த விநாயகம் உங்கள் நாட்கள் எண்ணப்படுகின்றன என்ற ஆங்கில வாசகத்தை கூறினார். அதற்கு அண்ணா பெருந்தன்மையுடன் நான் அளந்து அடி எடுத்து வைக்கிறேன் என்றார்,

மாற்றாரையும் மதிக்கக் கற்றுக் கொண்டதால் அண்ணா உயர்ந்தார். ஆற்றல் இருந்தும் மாற்றாரை மதிக்காததால் கருணாநிதி வீழ்ந்தார். மாற்றரை மதிக்கும்பண்பு இருப்பதால் புரட்சித் தலைவர் புகழ் பெற்று வருகிறார்.

புரட்சித் தலைவரை மக்கள் ஆட்சியில் அமரச் செய்கிறார்கள், ஆனால் கருணாநிதி ராஜினாமா செய் என்றார் இவர் யார் ராஜினாமா செய்யச் சொல்ல புரட்சித்தலைவருக்கு வாக்களித்த மக்கள் அல்லவா சொல்ல வேண்டும்.

### ரோஜாவைப் போல..

ராஜினாமா செய் செய் என்றவர் அவரே ராஜினாமா செய்தார். சனியன் பிணம் தனிப் போகாது என்பது போல், அன்பழகனையும் துணைக்கு அழைத்துக் கொண்டார். அதற்கு பின் அவரை தனியே விட்டு விட்டு இவர் மட்டும் மேலவை உறுப்பினர் ஆனார்.

புரட்சித் தலைவர் புகழை எவரும் எள்ளளவும் குறைக்க முடியாது. ரோஜாவை எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் அதன் மணம் மாறாது. அதுபோல் புரட்சித் தலைவரை யார் எப்படிச் சொன்னாலும் அவரது புகழ், பெருமை குன்றாது.

புரட்சித் தலைவர் உடல் நலிவுற்றிருந்த போது அவருக்காக 20 பேர் தங்கள் இன்னுயிரை ஈந்தனர் புரட்சித் தலைவருக்காக நடந்த பிரார்த்தனை போல் வேறு யாருக்கும் நடைபெறவில்லை, கருணாநிதி முதல்வராக இருந்த போது கூட அவருக்கு கான்ஸ்ரோல் ஏற்பட்டது அவர் நலம்பெற நாம் விரும்பினோம், ஆனால் இது போல் நடக்கவில்லை.

அரசாங்கத்தின்சார்பில் கருணாநிதி, என்.டி. ராமாராவ், ஹெக்டே போன்றோர் எல்லாம் மருத்துவ வசதி பெற்றனர். ஆனால் புரட்சித் தலைவர் தனக்கான மருத்துவச் செலவை அரசு ஏற்கக் கூடாது மக்களே ஏற்கவேண்டுமென்று கூறி அந்த மக்களிடமிருந்து பெற்றுத் தந்தார்.

புரட்சித்தலைவரைப் பற்றி தனிப்பட்ட முறையில் கருணாநிதி எவ்வளவோ பேசினாலும், புரட்சித்தலைவர் இதுவரை கருணாநிதியைப் பற்றி தனிப்பட்ட விமர்சனங்களை செய்ததில்லை.

### கருணாநிதி கூறும் பொய்

எதிர் கட்சிகளை பழி வாங்கும் சிந்தனை தவிர புரட்சித் தலைவருக்கு வேறு சிந்தனையே இல்லையாம் கருணாநிதி கூறுகிறார் மறைந்த தலைவர்களுக்கெல்லாம் அவர்கள் எந்தக்கட்சியை சேர்ந்தவர்கள் என்று பாராமல் விழா எடுத்து வருபவர் புரட்சித் தலைவர். இதுமட்டுமின்றி சத்துணவு திட்டம், தண்ணிறைவுத் திட்டம். இலவச சீருடை திட்டம் இப்படி. ஏழைகளுக்கு பயன் தரும் அடுக்கடுக்கான பல திட்டங்களை செயல் படுத்திவருகிறார். எதிர்கட்சிகளை அழிக்கும் சிந்தனையோடு புரட்சித் தலைவர் இருந்திருந்தால் இவைகளையெல்லாம் செய்திருக்க முடியுமா?

மாற்றுக் கட்சியினரை பாராட்டும் சிந்தனை தான் புரட்சித் தலைவருக்கு இருக்கிறதே தவிர அழிக்கும் சிந்தனை இல்லை.

மக்கள் மீது புரட்சித் தலைவருக்கு அக்கறை இல்லையாம். கருணாநிதி கூறுகிறார் மக்கள் மீது அக்கறை இல்லாமல் 163 கோடி ரூபாய் செலவில் சத்துணவும் 13½ கோடி ரூபாய் செலவில்இலவசச் சீருடையும், 12 கோடி ரூபாயில் இலவச பாடப்புத்தகங்களும் புரட்சித்தலைவர் வழங்குகிறார்.

இது மட்டுமின்றி நியாயவிலைக் கடைகளில் ஏழைமக்களுக்கு1ரூபாய்75 காசுக்கு அரிசி தரப் படுகிறது. மேற்கு வங்கத்தில் 2ரூபாய் 68 காசுக்கு தருகிறார்கள். ஏழைகளுக்கு குறைந்த விலையில் அரிசி தருவதால் இந்த ஆண்டு மட்டும அரசுக்கு 90கோடி ரூபாய் நட்டம் மக்கள் மீது அக்கறை இல்லாமலா புரட்சித்தலைவர் இதையெல்லாம் செய்கிறார்.

### மக்களுக்கு தெரியும்

தேர்தலின் போது கருணாநிதி எங்களையெல்லாம் ராஸ்கல் என்று கூறி THROW THE ASCALS OUT என்று முரசொலியில் போட்டார், மக்களுக்கு யார் ராஸ்கல் என்று தெரியும். ராஸ்களை தூக்கி எறிந்தனர்,

இந்தியா முழுவதும் எடுத்துக் கொண்டால் தொண்டர்களின் முழு நம்பிக்கையைப் பெற்ற ஒரே முதல்வராகபுரட்சித் தலைவர்தான் விளங்குகிறார்.

இப்போது புதிதாக ஒன்றை கிளப்பியிருக்கிறார், கருணாநிதி, அதாவது இப்போது இருக்கும் முதல்வர் (புரட்சித் தலைவர்) தகுதியானவர் தானா என்று கிளப்பியிருக்கிறார். புரட்சித் தலைவர் வாய் திறந்து பேசவில்லையாம். புரட்சித் தலைவர் இங்கு வந்த பின் ராஜீவை சந்தித்துப் பேசினார். சந்திக்க வருபவர்களையெல்லாம் சந்தித்துப் பேசிக் கொண்டுதான் இருக்கிறார்.

காமராஜர் முதல்வராக இருந்த போது அவர் சட்டசபையில் ஒருநாளும் பேசியதில்லை. அதற்காக அவரை யாரும் குறைத்துமதிப்பிடவில்லை. முதல்வர் சார்பில்சட்டசபையில் யார் வேண்டுமானாலும் பேசலாம். புரட்சித்தலைவர் என்ன சட்டசபையில் பேசாதவரா? பலமணி நேரங்கள் தொடர்ந்து பேசியவர்.

முதல்வர் நலம் பெற நாடே பிரார்த்தித்தது. அவர் நலம் பெற்று வருவது கண்டு மக்கள் மகிழ்வுடன் இருக்கிறார்கள், ஆனால் இவர்களுக்கு உள்ள எண்ணத்தைப் பார்த்தீர்களா? இப்படி நினைப்பவர்கள் எப்படி உருப்படுவார்கள் இவர்களை யார் மதிப்பார்கள்.

இதுமட்டுமல்ல, கருணாநிதி தன்னைப்பற்றி இப்படியும் எழுதிக் கொள்கிறார்.

### மமதைப் பேச்சு

கலைஞர் புகழ் பெற்றது சுயமுயற்சியால் காமராஜருக்கு சத்தியமூர்த்தி போலும், இந்திராவுக்கு நேரு போலும் யாரும் இவரை அரவணைக்கவில்லையாம், யாரையும் எதிர்பார்க்காமல் சொந்தக்காலில் நின்று வளர்ந்தவராம். ஆனால் நாம் பெருமைபட சொல்வதெல்லாம்அண்ணா பெரியார் தயவால்தான் இந்த நிலைக்குவந்தோம் என்கிறோம், ஆனால் கருணாநிதி பெரியார், அண்ணா யார் தயவுமின்றி சொந்தக் காலில் நின்றுபுகழ் பெற்றாராம். (பலத்த சிரிப்பு)

கருணாநிதிக்கு நல்ல எண்ணம் இருந்தால்லவா வெற்றி பெறுவார். மோசடி, பித்தலாட்ட அரசியல் எடுபடுமா?

இதுமட்டுமா தேர்தலின்போது புரட்சித் தலைவரின் படத்தைப் போட்டே தனதுகட்சிக்கு வாக்கு கேட்டார், இவ்வளவு பெரிய மோசடிகள் காட்டு மிராண்டிகள் வாழும் நாட்டில் கூட இல்லை.

எனவே இந்த நாடு நல்ல முன்னேற்றப்பாதையில் செல்ல நாட்டுக்கு நல்ல பல பணிகளை செய்ய புரட்சித்தலைவருக்கு தொடர்ந்துஆதரவு தர வண்டுகிறேன்

இவ்வாறு நிதியமைச்சர் நாவலர் பேசினார்.

மா. பாண்டியன் தலைமையிலும் எம். சிசேகர், ஆர். சௌந்திர பாண்டியன் முன்னிலையிலும், வி. நாரன், பி. அரிவரவேற்பிலும் நடைபெற்ற இந்தக்கூட்டத்தில் மேலவை கொடறா ஜேப்பியார்குடிசைமாற்று வாரியத்தலைவர் என்.வி என.செல்வம் மற்றும் வி, ராஜ்குமார், மு. அன்புத்தம்பி, எஸ்.வி. பாரிமுத்து பா. யாதவராமன், கே. நீலகண்டன், கே.ஆர்.சந்திரன், வி. துரைராஜ் சிந்தை சிவலிங்கம், ஏ. சுகுமார், புகழேந்தி செல்லகண்ணன் உள்ளிட்ட பலர் பேசினர். கோபிநாத் நன்றி கூறினார்.

---

## பூ. கணேசன் மறைவு

கடலூர், ஜூலை 19— நிலவு பூ.கணேசன்அவர்ந்த 10-7-85 இரவு காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம், 1947-49ல் தந்தை பெரியாருடன் நெருங்கிய தொண்டராயும். விடுதலை துணை ஆசிரியராயும் வாழ்க்கையைத்தொடங்கி1979 80ல் பெரியார் நூற்றாண்டு விழா சிறப்பு அதிகாரியாக தமிழக அரசால் நியமிக்கப்பட்டிருந்தார். ஓய்வு பெற்று சில ஆண்டுகளான அவர் [illegible] பாராதவகையில்இயற்கை எய்தினார்,

நீத்தார் நினைவு நாள் 28-7-85 ஞாயிறு அன்று 2, மரியசூசை நகர், கடலூரில் நடைபெறும்.

---

## பாண்டிச்சேரியில் மாநிலங்களவை இடைத்தேர்தல்

புதுடெல்லி, ஜூலை 19— யூனியன் பிரதேசமான பாண்டிச்சேரியில் காலியாகவிருக்கும் மாநிலங்களவையில் ஒரு இடத்துக்கான இடைத் தேர்தலை நடத்த மத்தியதேர்தல்கமிஷன் முடிவு செய்துள்ளது. இம்மாதம் 27-ம் தேதி ஒரு உறுப்பினரின் பதவிக் காலம் முடிவடைவதால் இந்த இடம் காலியாகிறது.

தேர்தலுக்காக அறிக்கை விவரம் வருமாறு:-

அறிக்கை தாக்கல் ஜூலை 20

மனுதாக்கல் செய்ய கடைசிநாள் ஜூலை 27

மனு பரிசீலனை ஜூலை 29

மனுக்கள் விலக்கிக் கொள்ள கடைசி நாள் ஜூலை 31

வாக்குப் பதிவு நாள் ஆகஸ்ட் 7

இவ்வாறு தேர்தல் கமிஷன் அறிவித்துள்ளது.

---

## சூரியகாந்தி எண்ணை விநியோகம்

சென்னை: ஜூலை:19 சென்னையிலுள்ள ரேசன் கடைகளில் பாமாலின் எண்ணை வழங்கப் பட்டது போல தற்போது கையிருப்பில் உள்ள சூரியகாந்தி எண்ணை யுதலம்ா கிலோ வீதம் பொதுவிநியோக முறையில் வழங்க படும் என்று அரசு அறிவித்துள்ளது,

## நிர்வாகிகள்தேர்வு

விழுப்புரம், ஜூலை 19 விழுப்புரம் தந்தை பெரியார் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிலாளர்கள் சங்க தேர்தல் நடை பெற்றது. முடிவில் தலைவராக பாலகிருஷ்ணன், பொதுச் செயலாளராக ரங்கநாதன்,

---

## கழக மாணவர்கள் பயிற்சி முகாம்

கோவை, ஜூலை 19— கோவை உடுமலைப்பேட்டையில் இம்மாதம் 20ம் தேதியிலிருந்து, 23ம்தேதி வரை நடைபெறும் கழக மாணவர் பயிற்சிமுகாமில் கலந்து கொள்வதற்காக கன்னியாகுமரி மாவட்ட கழக மாணவர்கள்மற்றும் கழக மாவட்ட மாணவர் அமைப்பாளர் செல்வின் குமார் தலைமையில் தனி பேருந்தில்செல்கின்றனர்.

## தமிழ்ராசன் இசைராணி நிகழ்ச்சிகள்

ஜூலை, 23 மாரண்ட பள்ளி,

24—மஞ்சப்பட்டி

25—காரிமங்கலம்

26—அத்திப்பட்டு

27—பாலக்கோடு

அ. தமிழ்ராசன்
69 ஆற்றுக் கிழக்கு தெரு, (நியூ சினிமா எதிரில்)
குகை, சேலம் - 636006

## சினிமா ஸ்டுடியோவில் மத்திய அமைச்சர்

சென்னை, ஜூலை!19. மத்திய தகவல் ஒலிபரப்பு இணை அமைச்சர் வி.என்.காட்கில் வரும் 21ந்தேதி சென்னை வருகிறார்.

அப்போது அவர் சென்னையிலுள்ள சினிமா ஸ்டுடியோக்களையும்திரைப்பட பிரதிநிதிகளையும் சந்தித்துப்பேசுகிறார். பின்னர் தென்னிந்திய திரைப்படத்துறை ஏற்பாடுசெய்துள்ள நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வார்.

---

## இந்திய மருத்துவம் & ஓமியோபதி துறை

சென்னை

## அறிக்கை

இந்திய மருத்துவத்தில் சித்த மருந்தாளுநர் பட்டயப் (டிப்ளமா) படிப்ப 1985-86 அரசினர் சித்த மருத்துவக் கல்லூரி பாளையங்கோட்டை மற்றும் அறிஞர் அண்ணா அரசினர் இந்திய மருத்துவமனை, சென்னை—600106 ஆகிய இடங்களில் பயிற்சிபெற விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

சித்த மருந்தாளுநர் பட்டயப்படிப்பு(டி.பார்மசி-சித்தா)க்கான கல்வித் தகுதி.

எஸ்.எஸ்.எல்.சி. நிறைவு (Completed) பழைய பாடத்திட்டத்தின்படி. அல்லது

புதிய பாடத்தின் (பிளஸ் 2 கல்வித்திட்டத்தின்) கீழ் பத்தாம் வகுப்பில் தமிழ் மற்றும்அறிவியல்பாடம் பயின்று தேறியிருத்தல் வேண்டும். தேர்வு நாடுபவர் தமிழ் மற்றும் அறிவியல்பாடத்தில் பெற்றமதிப்பெண்களின் திறமையின் அடிப்படையில் தேர்வு செய்யப்படுவார்கள்.

மாணவர்கள்மேல்கூறிய படிப்புக்கான விண்ணப்பபடிவத்தினையும் தகவல்தொகுப்பினையும்இந்திய மருத்துவம் &ஓமியோபதி இயக்குனர் சென்னை-600106 அவர்கள் பெறும் வண்ணம் குறுக்குக்கோடிட்ட ரூ.5/-(ரூபாய் ஐந்து மட்டும்)க்கான இந்தியன் அஞ்சல் ஆணை (Indian Postal order) யுடன் ரூ. 1.55 (ஒரு ரூபாய் ஐம்பத்து ஐந்து காசு)க்கான அஞ்சல் தலைஒட்டப்பட்ட 25×10 செ. மீ. அளவுள்ள சுய முகவரியிட்ட உறையுடனும் இந்திய மருத்துவம்&ஓமியோபதி இயக்குனர் சென்னை 600 106 என்ற முகவரிக்கு விண்ணப்பித்துப் பெற்றுக்கொள்ள வேண்டும் இந்தியன் அஞ்சல் ஆணை (Indian Postal Order) 25-7-1985க்கு முந்திய தேதி உடையதாகஇருத்தல்கூடாது.

விண்ணப்பப் படிவம் 25.7.85 முதல் வழங்கப் படும் நிரப்பப்பட்ட விண்ணப்பங்களைப் பெற்றுக் கொள்வதற்கான கடைசி நாள் 30.8.85 மாலை 5 மணியாகும்.

மேற் குறிப்பிட்டகாலத்திற்குப் பிறகு பெறப்படும் விண்ணப்பங்கள் முழுவதுமாக நிராகரிக்கப்படும்.

மேலும் விவரங்களுக்கு தகவல் தொகுப்பினைக் காண்க.

இந்திய மருத்துவம்&ஓமியோபதி இயக்குநர்.

சென்னை—600106.

டிஐபிஆர்/27652/85—4 (ஆர்)

---




ஏசுவார் ஏசலினை இகழுவார் இழிமொழியை
குண்டூசிக்குமிழ் போன்ற உள்ளத்தில் ஏற்று
குளிர் முகங்காட்டும் குணக் கோயிற் தெய்வம்

மாண்புமிகு தமிழக முதல்வர்

டாக்டர்

# புரட்சித்தலைவர்



அவர்களின் நல்லாசியோடு

1985 ஜூலை 20, 21, 22, 23 ஆகிய நான்கு நாட்கள்

## அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக

## ★★★★★★★★★★ மாநில மாணவர் பயிற்சி முகாம் ★★★★★★★★★★

உடுமலைப்பேட்டை, அரிமாசங்க அரங்கில்

கழக மாணவர் அணி செயலாளர்
கா. லியாகத் அலிகான் பி.ஏ., எல்.எல்.பி.,
அவர்கள் தலைமையில்

கோவை புறநகர் மாவட்ட கழக செயலாளர்
பொள்ளாச்சி வ.ஜெயராமன்

கோவை மாநகர் மாவட்ட கழக செயலாளர்
த. மலரவன்

ஆகியோர் முன்னிலையில் நடைபெற உள்ளது.

★ அது போழ்து ★

கழகப் பொதுச் செயலாளர்
திருமிகு எஸ். இராகவானந்தம்

துணைப் பொதுச் செயலாளர்
திருமிகு எஸ். ஆர். இராதா

பொருளாளர்
திருமிகு எஸ். மாதவன்

ஆகியோர் கலந்து கொள்வார்கள்

### 20-7-85 சனி

மாண்புமிகு அமைச்சர் ஆர். எம். வீ.
,, சு. முத்துசாமி
,, வி வி சுவாமிநாதன்
,, கே கே. எஸ். எஸ் ஆர். ராமச்சந்திரன்
திருமிகு முன்னாள் அமைச்சர் ப. குழந்தைவேலு, எம். பி
மாண்புமிகு பாவலர் மா. முத்துசாமி
திருமிகு திருப்பூர் மணிமாறன்
,, ஆலடி அருணா, எம். பி.
,, இரா. அண்ணா நம்பி, எம்.பி.
,, ஜி. வரதராஜ், எம்.பி.
,, ஜெகத்ரட்சகன், எம். பி.
,, ஏ. சி. சண்முகம், எம். பி.
,, மா. சின்னராஜ், எம்.எல் ஏ.
,, புருஷோத்தமன் எம்.எல் ஏ.
,, சைதை துரைசாமி, எம்.எல்,ஏ.
,, தஞ்சை என். எஸ். இளங்கோ
,, கே,ஆர்.பி. மணிமொழியன்
,, கவியரசு முத்துராமலிங்கம்
,, சூலூர் கந்தநாதன்

இரவு: நவரசம் ஜி கே எஸ்
கலைநிகழ்ச்சி நடைபெறும்

### 21-7-85 ஞாயிறு

மாண்புமிகு அமைச்சர் செ, அரங்கநாயகம்.
மாண் மிகு நாடாளுமன்றதுணைசபாநாயகர் மு.தம்பித்துரை,
மாண்புமிகு அமைச்சர் நல்லுசாமி
மாண்புமிகு டெல்லி சிறப்பு பிரதிநிதி ஜி ஆர். எட்மண்ட்.
மாண்புமிகு அமைச்சர் அ.அருணாசலம்
திருமிகு முசிறியார், எம்.எல்.ஏ.
,, ஆ. வெள்ளைச்சாமி முன்னாள் எம்.எல்.ஏ.
திருமதி. சுலோசனா சம்பத்
திருமிகு, என். வி. என். செல்வம்
,, டீ. வி நாராயணசாமி
,, கே, கலைமணி எம்.எல்.சி.
,, கே. வி. கந்தசாமி, எம் எல்.ஏ.
,, பி.என், ராமச்சந்திரன், எம்.எல்.ஏ.
,, இரா. சாம்பசிவம் எம்.பி,
,, செம்மலை எம்.எல் ஏ.
,, மாரிமுத்து, எம்.எல்.ஏ.
,, சிவப்பிரகாசம். எம்.எல்.ஏ,
,, முத்துலிங்கம். எம்எல்சி.
,, தரங்கை கண்ணன்.

இரவு: மாணவர்கள் நடிக்கும் நாடகம்

### 22-7-85 திங்கள்

மாண்புமிகு அமைச்சர் பண்ருட்டியார்
,, எஸ். திருநாவுக்கரசு
,, திருச்சி ஆர். சவுந்திர ராசன்
,, விஜயலட்சுமிபழனிசாமி
திருமிகு சட்டமன்ற துணை சபாநாயகர் வி. பி. பாலசுப்பிரமணியம்
,, புலவர் புலமைப்பித்தன்
திருமிகு க. சுப்பு, எம்.எல்.சி.
,, ஜேப்பியார், எம் எல்.சி.
,, துரை கோவிந்தராசன், எம்,எல்.ஏ
,, தத்துவமேதை டீ. கே. சீனுவாசன் முன்னாள் எம்.பி.
,, வலம்புரி ஜான், எம்.பி.
,, குப்புசாமி, எம்.எல்.ஏ.
,, செல்வேந்திரன், எம்.பி.
,, காடுவெட்டி கண்ணப்பன், எம்.எல்.சி.
,, நெல்லை பாலாஜி, எம்.எல்.சி.
,, டாக்டர் கோ. சமரசம், எம்.எல்.ஏ.
,, திருவாரூர் தென்கோவன்

திருமிகு எம். எஸ். ஜோதி
குழுவினரின்
குழந்தைகள் நடனம்

### 23-7-85 செவ்வாய்

மாண்புமிகு அமைச்சர் கே. ஏ. கே.
,, ப. உ. ச.
,, டாக்டர் காளிமுத்து
,, டாக்டர் அண்டே
,, ஒய். எஸ். எம். யூசுப்
திருமிகு திருக்குறள் முனுசாமி
,, கோவை செழியன்
,, அனகாபுத்தூர் ராமலிங்கம், எம்.எல்.சி.
,, இரா. ஜனார்த்தனம் எம்.எல்.சி,
,, கோ. செங்குட்டுவன்
,, மதுசூதனன் எம். எல். சி.
,, வை. பெருமாள்
,, எம். வி. இரத்தினம், எம்.எல்.ஏ.
,, பி. என். பரமசிவம், எம். எல். ஏ.
,, பி. கந்தசாமி, எம்,எல்.ஏ.
,, லட்சுமி, எம். எல். ஏ.
,, கே. பி. ராமலிங்கம் எம். எல். ஏ,
,, நாஞ்சில் வின்சென்ட் முன்னாள்எம்.எல்.ஏ.
,, கோடம்பாக்கம் குமார்

கோவை புலிபாலு குழுவினரின்
'சத்தியம் சாவதில்லை'எனும் நாடகம்

★ 20.7-85 அன்று காலை 8-00 மணியளவில் உடுமலை பஸ் நிலையம் அருகிலுள்ள பேரறிஞர் அண்ணா சிலையிலிருந்து புறப்படும் சீருடை அணிந்த மாணவர் அணிவகுப்பு உடுமலை அரிமா சங்கத்தை சென்றடையும். ★

அன்புடன் வரவேற்கும்:

முருகுமணி, எம்.ஏ.
என். லிங்கராஜ், பி.ஏ.
சிங்கை நடராஜ். எம் ஏ.பி,எல்.
டாக்டர் பொ. ராஜேந்திரன் பி.ஏ.
எஸ். எம். வேலுசாமி. பி.ஏ பி.எல்.
வால்பாறை வை. முத்தையா
பூவை பாலாஜி
பனியன் துரை
சென்னை செல்வம். பி.ஏ.பி.எல்.
குமரி ராதாகிருஷ்ணன்
கோவை ரபியுல்லா, பி.எஸ்ஸி (அக்ரி)
சேலம் நடேசன் பி ஏ.
சரூர் எஸ். நாகராஜன், பி.காம்

சமயபுரம் கோவிந்தராஜன் பி.ஏ.பி.எல்.
புதுகை ராஜகோபால், பி.ஏ.
சூலூர் ராஜேந்திரன்,
தஞ்சை ஆர் குணசேகரன்
தஞ்சை ஆழி கோ. மருதையன்
ஆம்பூர் கே.எம். மனோகரன், எம்.ஏ.
சென்னை தமிழ்மாறன், பி காம்
கோவை கருணாசரன், பி.எஸ்ஸி (அக்ரி)
டீ வள்ளல், பி. ஏ.
கள்ளிப்பட்டி மணி பி. எஸ்ஸி.,
காங்கேயம் கார்த்திகேயன், பி. ஏ.,
ஈரோடு முத்துசாமி, பி ஏ.,
மதுரை சேக்பரீத் பி. எஸ்ஸி.,

துரை ராஜமாணிக்கம், பி. ஏ.,
எஸ். கோதண்டம், பி. ஏ., (பி எல்)
சென்னை கவுதமன், பி. ஏ., (பி எல்)
கொழுமம் கே எம், சுப்பிரமணியம், எம். ஏ.,
கே. ஜி, பழனியப்பன் பி. ஏ.,
செல்வின்குமார், பி. ஏ.,
ஊட்டி முகம்மதுஆசம், பி. ஏ.,
ஊட்டி அசோகன், பி. ஏ.
குமரி இராஜசேகரன், எம். ஏ.,
குமரி ராஜ்குமார், பி. காம்.,
சிவ. பிரபாகரன், பி. ஏ.,
சென்னை தேவநாதன், பி. ஏ.,
சென்னை மு இரத்தினவேல், பி.ஏ, பி.எல்.

பொள்ளாச்சி நேத்ராஜிபாபு
எஸ். கே. தனுஷ், பி. ஏ.,
நெல்லை கோ. முத்துராமலிங்கம், பி. ஏ.,
தருமபுரி எம். ஜி. சேகர், பி.ஏ. பி.எல்.,
தருமபுரி எஸ் ராமச்சந்திரன், பி.ஏ.,பி.எல்
தருமபுரி எஸ்.கே.ஜி. சேகர் பி.ஏ.,பி.எல்.
எஸ், குணசேகரன், பி.ஏ.,பி.எல்.
தெ. ஆ. அற்புதவேலு, பி. ஏ.,
தருமபுரி மரியதாஸ், எம்.பி.,பி.எஸ்.
பொன்னுதுரை, பி. ஏ,
தருமபுரி அன்பழகன், எம்.பி.,பி.எஸ்.
பொள்ளாச்சி விஸ்வநாதன், பி. ஏ,

மலர்க்குழு: கவிஞர் கண்ணமாறன், கே. ஜி. சண்முகம் எம்.ஏ(எல்.எல்.பி)



பொதுக்கூட்ட நிகழ்ச்சிக்கு அனைவரும் வாரீர்! ஆதரவு தாரீர்!

வரவேற்புக் குழுவினர்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக மாநில மாணவர் பயிற்சி முகாம்,
உடுமலைப்பேட்டை.



# பெரியார் மாவட்டத்தில் கூட்டுறவு கடன்களை வசூலிப்பதில்





# மாபெரும் சாதனை

## மாநிலத்திலேயே முதலிடம் வகிக்கிறது

1982-ம் ஆண்டு தந்தை பெரியாரின் பெயரால்
3 - 2 - 82 அண்ணா நினைவு நாளன்று
மாண்புமிகு **புரட்சித்தலைவர்** அவர்களின்
நல்லாசியுடன் துவங்கிய இவ்வங்கி
முதல் ஆண்டில் மாநிலத்தில் மூன்றாம் இடத்தை வகித்தது.
இரண்டாம் ஆண்டு இரண்டாவது இடத்தை எட்டியது.
மூன்றாம் ஆண்டு முதலிடத்தை பிடித்தது. இவ்வாண்டு முதலிடத்தை தக்க வைத்துக் கொண்டது.

மாண்புமிகு டாக்டர் **புரட்சித் தலைவர்** அவர்களின்
அன்பு வேண்டுகோளை ஏற்று 30-6-85-க்குள் செலுத்த வேண்டிய கடனில் 96 சதம்
திருப்பி செலுத்திய பெரியார் மாவட்ட விவசாயப் பெருங்குடி மக்களுக்கும்,
இவ்வங்கி இச்சிறப்பைப்பெற தக்க அறிவுரைகளும், ஆலோசனைகளும் தந்த
மாண்புமிகு கூட்டுறவுத்துறை அமைச்சர்
**கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன்** அவர்களுக்கும்,
மாண்புமிகு போக்கு வரத்துத்துறை மற்றும் நெடுஞ்சாலை பணித்துறை அமைச்சர் **எஸ். முத்துசாமி** எம் ஏ., அவர்களுக்கும்
பெரியார் மத்திய கூட்டுறவு வங்கியின் சார்பில்
இதயங்கனிந்த நன்றியை தெரியப்படுத்திக் கொள்கிறோம்.

இங்ஙனம்,
ஆர். ரங்கசாமி
முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்,
பெருந்தலைவர் மற்றும் இயக்குநர்கள்

எங்கள் வங்கியில்

## பொற்குவியல் மற்றும் தாய் சேமிப்புத் திட்டங்களில் சேர்ந்து மிகுந்த பயன் பெறுவீர்!